ரூ. 8.00

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

திருவள்ளுவர் ஆண்டு 2050 கார்த்திகை- 2051 மாசி
நவம்பர் 2019 - பிப்ரவரி 2020

## தருமை ஆதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்





சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



தருமை ஆதீனம் 27ஆவது
குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக
ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| திருவள்ளுவர் ஆண்டு 2050, 2051 | மாதம் : கார்த்திகை – மாசி |
|---|---|
| மலர் : 33–34 | இதழ் : 10–12, 1–2 |


## தருமை ஞானக் குருமணிகள் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அருள் பரவட்டும்!

தருமபுரம் ஆதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் தமது 94ஆவது வயதில் பரிபூரணம் அடைந்துவிட்டார்கள். அவர்கள் ஆற்றிய திருப்பணிகள் அளப்பரியவை. சைவத்தையும், தமிழையும் இருவிழிகளாகப் போற்றிய தவசீலர்.

வேதம், ஆகமம், சாத்திரம், தோத்திரம், புராணம், இதிகாசம் பற்றிய கருத்தரங்குகள் மாநாடுகளைச் சிறப்புற நடத்தியவர்கள். பன்னிரு திருமுறைகளுக்கும் பல்லாண்டு காலம் உழைத்து செம்மைப் பதிப்பு வெளியிட்டவர்கள். எண்ணிலா ஆலயத் திருப்பணிகள் செய்து குடமுழுக்கு விழாக்கள் கண்டவர்கள். தம் பூஜாமூர்த்தி அருள்மிகு சொக்கநாதப் பெருமானை இடையறாது, இமைப்பொழுதும் சோர்விலாது பூசித்தவர்கள்.

நமது அருள்நெறித்தந்தை குருமகாசந்நிதானம் தவத்திரு அடிகள் பெருமானும், பரிபூரணமடைந்த தருமை 26ஆவது குருமகாசந்நிதானமும், தருமை ஞானப் பண்ணையில் இணைந்து துறவுத் தோழமையாய் வாழ்ந்தவர்கள். நமது தவத்திரு அடிகள் பெருமான் மீது மாறிலா அன்பு கொண்டவர்கள்.

அடிகள் பெருமானின் சமய வழிப்பட்ட இயக்கமாகிய அருள்நெறிக்கூட்டம், திருமடங்களின் கூட்டமைப்பாகிய தெய்வீகப் பேரவை போன்ற அமைப்புகளின் வழியே சமயப் பிரச்சாரப் பணிகளில் துணை நின்று பணி செய்தவர்கள்.

தருமைக் கயிலைக் குருமணிகள் பரிபூரணமடைந்ததை அடுத்து, பரிபூரணமடைந்த 26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக

ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் ஞானபீடம் அமர்ந்து அருளாட்சிப்புரிந்தார்கள். நம் மகாசன்னிதானம் குன்றக்குடி அடிகள் பெருமான் பரிபூரணம் அடைந்தபோது குன்றக்குடிக்கு விரைந்து வந்து இறுதியாத்திரையில் கலந்து கொண்டு குருமூர்த்த பூசைகள் முடிந்து நமக்கு ஆறுதலும் ஊக்கமும் கூறிச் சென்றார்கள்.

தருமை குருமகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் சில ஆண்டுகளுக்கு முன்பு சென்னை அப்பல்லோ மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தபோது நாம் நேரில் சென்று நலம் விசாரித்தோம். அப்போது தருமை ஆதீன குருமகாசன்னிதானம் நம்மீது அன்புகாட்டி நெகிழ்ந்து போனார்கள்.

தருமை குருமகாசந்நிதானத்தின் 80ஆவது ஆண்டு நிறைவு கனகாபிஷேக விழாவில் "தவஞான அருள் ஞாயிறு" என்று போற்றிப் பாராட்டி மகிழ்ந்தோம்.

சமய உலகத்திற்கு நெருக்கடிகள், சிக்கல்கள் தோன்றினால் அரசு மூலமாகத் தீர்க்க வேண்டிய பிரச்சனையாக இருந்தால் சில நேரங்களில் நம்மை அழைத்துப் பேசி நம்மை அரசிடம் எடுத்துரைக்கச் செய்து பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

தவ ஞான ஞாயிறாய் ஒளி வீசிய கதிர்ஒளி தன் ஆன்மீக ஒளியைப் பன்மடங்கு பெருக்கமாய் ஒளிவீசச் செய்து கொண்டிருக்கின்றார்கள்.

அந்த ஞானத் தடத்தில் இந்நாளைய மகாசன்னிதானமான 27ஆவது குருமகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அடக்கம், அன்பு, ஞானம், தொண்டு ஆகியவற்றின் உறைவிடமாய்த் தொடர்ந்து ஆன்மீகப் பணி ஆற்றி வருகின்றார்கள்.

வாழையடி வாழையாய் தருமை ஆதீன ஞான மரபு தொடர்ந்து ஆன்மீக ஒளியைப் பரவச் செய்து கொண்டிருக்கின்றது.

26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகத் தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் அருள் பரவுக. 27ஆவது குருமகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்களின் ஆன்மீகத் தொண்டு தொடரட்டும்.

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

## சிறப்பாசிரியர்
## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களின்
# அமெரிக்கப் பயணச் சிறப்புக் கட்டுரை - 2

அமெரிக்காவில் பாஸ்டன் நகரில் பாஸ்டன் துறைமுகத்தில் பாஸ்டன் தேநீர் விருந்து கண்காட்சியகம் அமெரிக்க மக்களின் சுதந்திர உணர்வுகளை நமக்கு நினைவூட்டுகிறது. அமெரிக்காவில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த பாஸ்டன் தேநீர் விருந்து என்ற நிகழ்வு அமெரிக்கர்களின் சுதந்திர அமெரிக்காவிற்கு அடித்தளமாய் அமைந்தது. சுதந்தர உணர்வுகளையும், தங்கள் நாட்டின் வரலாற்று நிகழ்வுகளையும் பேணிக்காப்பதில், அடுத்த தலைமுறைக்குக் கொண்டு சேர்ப்பதில் அமெரிக்கா முன்னணியில் நிற்கிறது. பாஸ்டன் துறைமுகத்தின் பாஸ்டன் தேநீர் விருந்து நினைவகம் நம் கருத்தைக் கவர்கிறது. அந்நாளைய பாஸ்டன் தேநீர் விருந்து நினைவகம் நம் கருத்தைக் கவர்கிறது. அந்நாளைய பாஸ்டன் தேநீர் விருந்து எப்படி நம் இந்தியத் திருநாட்டில் மகாத்மா காந்தியடிகள் தண்டியாத்திரையை நடத்தினாரோ, உப்புச் சத்தியாகிரகத்தை நடத்தினாரோ, அப்படி உப்பிற்கு விதிக்கப்பட்ட வரியை எதிர்த்து அமெரிக்க மக்கள் நடத்திய அந்த நாளைய மக்களின் பேச்சு, அப்படியே ஒரு நாடகக் காட்சியாக அவர்கள் நடித்துக் காட்டுவது, தேயிலையைக் கடலில் கொட்டுவது, அந்நாளையத் துறைமுகத்துக் கப்பலை கண்காட்சிப் பொருளாக வைத்திருப்பது என இப்படி அமெரிக்கர்கள் தங்களது தேச பக்தியை, வரலாற்றுப் பெட்டகத்தை இன்றைய தலைமுறைக்கும் கொண்டு சேர்க்கிறார்கள். நவீன அறிவியல் தொழில்நுட்பத்தோடு அவர்கள் கொண்டு சேர்க்கிற முயற்சியைப் பார்க்கிறபோது, நாம் நமது வரலாற்றை அடுத்தத் தலைமுறைக்குக் கொண்டு சேர்த்திருக்கிறோமா? என்ற சிந்தனைதான் தோன்றுகிறது.

தேசவிடுதலைப் போராட்டத்தின் உச்சகட்ட நிகழ்வான தண்டியத்திரைப் போராட்டத்தைத் தொடங்கி வைத்து தொடக்கவுரை ஆற்றினார் காந்தியடிகள். அதை அடுத்த தலைமுறைத் தெளிவாய்த் தெரிந்திருக்கிறதா?

"தண்டியாத்திரைப் போராட்டத்தில் எனக்கு மகாத்மா என்ற பட்டத்திற்குப் பதிலாக உப்புத் திருடன் என்ற பட்டத்தை மக்கள் அளித்துள்ளார்கள். இந்தப் பட்டம் எனக்குப் பிடித்தமானதாக இருக்கிறது. ஒரு மனிதன் மகாத்மாவாக மாறிவிடுவது சுலபமானது. ஆனால், உப்புத் திருடனாக மாறுவது கடினமானது. அரை ஆடை உடுத்திக் கொண்டு உணவு உண்பது மற்றும் பழக்கவழக்கங்கள் குறித்து ஏதாவது பேசினால் இந்த நாட்டில் ஒருவன் எளிதாக மகாத்மாவாகக் கருதப்படுவான். ஒருவன் சட்டத்தை மீறி ஒரு பொருளை அபகரிக்கும்போதுதான் திருடனாகக் கருதப்படுவான். சட்டத்தை மீறி நான் உப்பை எடுத்து வருவதால் என்னை உப்புத் திருடன் என்று மக்கள் கூறுகின்றனர். உண்மையிலேயே நான் சட்டத்தை மீறினேனா? நான் உப்புத் திருடனா? என்ற சந்தேகம் எனக்கு வந்துள்ளது. நான் உண்மையிலேயே சட்டத்தை மீறியிருந்தால், உப்புத் திருடனாக மாறி இருந்தால் இந்நேரம் கைதுசெய்யப்பட்டு சிறையில் அல்லவா இருக்க வேண்டும்?" என்று காந்தியடிகள் கூறினார்கள்.

உப்பைப் பற்றி ஒரு சுவையான கதை கிராமத்தில் சொல்வார்கள். டால்ஸ்டாயின் உருவகக் கதை அது. ஒரு அரசனிடம் வெள்ளையான ஒரு பொருளைக் கொண்டுவந்து ஊர்மக்கள் காட்டுகிறார்கள். அந்தப் பொருளைப் பற்றி ஆய்வு நடக்கிறது. அந்த ஆய்வில் ஒரு வயதான பெரியவரிடம் இந்தப் பொருளைப் பற்றிக் கேட்டால் தெரியும் என்று எண்ணி ஒரு பெரியவரை அழைத்துக் கேட்டான் அரசன்.

வயது முதிர்ந்தவர் தடியூன்றி வருகிறார். கண் பார்வை இல்லை. அந்தப் பொருளைப் பார்த்துவிட்டு, "இந்தப் பொருளைப் பற்றி எனக்கு அதிகம் தெரியவில்லை. சிறுவயதில் பார்த்திருக்கிறேன். இந்த வெள்ளைப் பொருளைப் பற்றி என் அப்பாவிடம் கேட்கலாம்" என்று அந்தப் பெரியவர் சொல்லிவிட்டு போய்விடுகிறார்.

பின்னர் அவரின் அப்பா வருகிறார். கையில் தடியின்றி, சற்று பார்வை குறையோடு, நடுக்கத்தோடு வருகிறார். ஆனால், முதலில் வந்த பெரியவரின் அப்பா இவர். அவர் அந்தப் பொருளைப் பார்த்துவிட்டு "இந்தப் பொருள் எங்கள் காலத்தில் ஓரளவு கிடைத்தது. திடீரென்று இந்தப் பொருள் பின்னர் கிடைக்காமல் போய்விட்டது. ஆனால், இதைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றால் என் அப்பாவிடம் கேட்க வேண்டும் " என்று சொல்லிவிட்டுப் போகிறார்.

அரசன் ஆச்சர்யத்தோடு அவர் அப்பாவை வரச்சொன்னார். அவர் அப்பாவோ தடியில்லாமல், கம்பீரமான குரலுடன், மிடுக்கான நடையுடன் வந்தார். முதலில் வந்தவருக்குத் தாத்தா அவர். அடுத்து வந்தவருக்கு அப்பா. அந்தப் பொருளைப் பார்த்துவிட்டு "இது எங்கள் காலத்தில் ஏராளமாய்க் கிடைத்தது. நாங்கள் இந்தப் பொருளைச் சேர்த்தோம். இந்தப் பொருளுக்குப் பெயர் உப்பு" என்றார் அந்த முதியவர். ஆக, அந்த உப்பின் மகத்துவம் இளமையைப் பேணுவதாக இருக்கிறது என்ற அடிப்படையில் இந்த உருவகக் கதை அமைந்திருக்கிறது.

உப்புச் சத்தியாகிரகத்தில் காந்தி ஈடுபட்டபோது பம்பாயில் மகளிர் தொண்டர்கள் மறைமுகமாக உப்புப் போராட்டத்தில் பங்கேற்றனர்.

"புனித உப்பு, காந்தி உப்பு, சட்ட மறுப்பு உப்பு, இந்தியாவிற்கு விடுதலையை வாங்கித் தரும் உப்பு" என்று கோஷம் இட்டுக்கொண்டே பம்பாய் வீதிகளில் உப்பை விற்றனர்.

காந்தியடிகளின் உப்புச் சத்தியாக்கிரகத்தின் நோக்கம் உப்புக்கு வரி விலக்கு மட்டுமல்ல. பூரண மதுவிலக்கு, அந்நியத் துணிகளுக்குக் கொடுக்கப்படும் வரிச் சலுகையைக் குறைத்தல், அந்நியப் பொருட்களை வாங்குவதை புறக்கணித்தல் என்று 11 அம்ச கோரிக்கைகளை உள்ளடக்கிய நோக்கத்தோடுதான் உப்புச் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கி வைத்தார் காந்தியடிகள்.

மகாத்மா காந்தியடிகளுக்கும் வைஸ்ராய் இர்வின் பிரபுவிற்கும் இடையே இந்தப் போராட்டங்களை முடிவிற்குக் கொண்டுவருவதற்கான பேச்சுவார்த்தை நடைபெற்றது. அந்தப் பேச்சுவார்த்தையின்போது ஒப்பந்தத்தில் கையெழுத்து இடுவதற்கு முன்பு காந்தியடிகளும், இர்வின் பிரபுவும் தேநீர் அருந்த இருக்கிறார்கள். காந்தியடிகள் தேநீர் அருந்தும்முன் சற்று புன்னகைத்துக்கொண்டே தன் பையில் முடித்து வைக்கப்பட்டிருந்த ஒரு பொருளை எடுத்து உயர்த்திக் காட்டி பாஸ்டன் தேநீர் விருந்து நினைவாக ஒரு பொருளை எடுத்து உயர்த்திக் காட்டி பாஸ்டன் தேநீர் விருந்து நினைவாக என்னுடைய தேநீர் கோப்பையில் இந்த உப்பை நான் போடுகிறேன் என்று கண் சிமிட்டிக்கொண்டே உப்பைத் தேநீர் கோப்பையில் போட்டார். இர்வின் பிரபு ஆச்சர்யத்துடன் அந்தக் காட்சியை ரசித்தார் என்பார்கள். ஆக, அமெரிக்காவில் நடந்த பாஸ்டன் தேநீர் விருந்து போராட்டத்திற்கும், இந்தியத் திருநாட்டின்

தண்டியாத்திரையாகிய உப்புச் சத்தியாகிரகத்திற்கும் எவ்வளவு ஆன்மார்த்தமான தொடர்பு இருக்கிறது.

அமெரிக்கப் பத்திரிக்கையாளர்களும் பாஸ்டன் தேநீர் விருந்து எப்படி சுதந்திர அமெரிக்காவைத் தோற்றுவித்ததோ அப்படித்தான் இந்தியாவிற்கு இந்த தண்டியாத்திரை என்ற உப்புச் சத்தியாகிரகம் விடுதலையைப் பெற்றுத் தரும் என்று கணித்துக் கூறினார்கள்.

மகாத்மா காந்தியடிகள் பெண்களை மதுவிலக்கு பிரசாரத்தில் முழுமையாக ஈடுபட வலியுறுத்தினார். மதுக்கடைகள் முன்பு பெண்கள் நின்று கொண்டு மது அருந்துவதால் ஏற்படுகின்ற தீமையை குடிப்பழக்கத்திற்கு அடிமையானவர்களுக்கு எடுத்துரைத்து, அவர்களை மது அருந்துவதை தவிர்க்கும்படி வேண்டுகோளாக விடுக்கும்படிக் கேட்டுக்கொண்டார். பெண்கள் மதுவிலக்குப் போராட்டப் பிரச்சாரத்தில் அந்நியத் துணிகள் புறக்கணிப்பை தீவிரமாக கடைப்பிடித்தார்கள்.

சில பெண்கள் மகாத்மா காந்தியடிகளிடம் தங்கள் சந்தேகங்களைக் கேட்டார்கள். "நாங்கள் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும்போது தாக்கப்பட்டால் என்ன செய்வது" என்று கேட்டனர் பெண்கள்.

"பெண்களைத் தாக்கும் துணிவு யாருக்கும் இல்லை என்று நினைக்கிறேன். அவ்வாறு தாக்கப்பட்டால் அதுவே உங்களுக்குக் கிடைத்த பெரிய வெற்றியாகும். அதன்பிறகு அந்த மதுக்கடைக்காரர் தன் வாழ்நாள் முழுவதும் மது விற்பனையில் ஈடுபடமாட்டார்" என்று பதில் அளித்தார் காந்தியடிகள்.

சத்தியாக்கிரகம் என்பது ஒரு வாழ்வு முறை என்பதை காந்தியின் உபதேசம் உணர்த்தியது. ஒரு உண்மையான சத்தியாக்கிரகி உலகில் யாருக்கும், எதற்கும் அச்சப்படமாட்டார். மனதில் இருந்து பயம் விலகி விட்டவனாகவே அவன் வாழ்நாள் முழுதும் இருப்பான் என்பது காந்தியின் அறிவுரை. ஒரு சமூகத்தில் உள்ள தனி மனிதனின் மனப்பாங்கை மாற்றினால் மட்டுமே சமூக மாற்றம் ஏற்படும் என்று காந்தி உறுதியாக நம்பினார்.

உப்பு என்பது விசுவாசத்தின் குறியீடு. நன்றியறிதலின் அடையாளம். உப்பு இன்றியமையாதது. உப்பைப் போல் மகாத்மா

காந்தியடிகள் எளிமையானவர். மழையைப் போல் தூய்மையானவர். உப்பு இன்றியமையாததாக இருக்கிற காரணத்தால் பந்தியில் முந்திப் பரிமாறப்படும். "உப்பிட்டவரை உள்ளளவும் நினை" என்று தமிழ்மொழி வழங்குகிறது. இது நன்றியின் அடையாளத்தை வலியுறுத்துகிறது. அந்த எளிய உப்பின் மூலம் ஒரு நாட்டின் விடுதலை வேள்வியை மகாத்மா காந்தியடிகள் திறம்பட நடத்தினார்.

அதைப்போல, தமிழகத்தில் வேதாரண்யத்தில் இராஜாஜி தலைமையில் நடைபெற்ற உப்புச் சத்தியாகிரகப் போராட்டம் தென் தமிழகத்தில் சுதந்திர வேள்விக்கு மறுமலர்ச்சி தந்தது.

அமெரிக்காவில் சுதந்திர தேவி சிலை (Statue of Liberity) அமெரிக்கா பிரெஞ்சின் நட்புறவின் அடையாளமாக விளங்குகிறது. பிரான்ஸ் நாடு சுதந்திர தேவி சிலையை அமெரிக்காவிற்கு அன்பளிப்பாக வழங்கியது. அந்தச் சுதந்திரதேவி சிலை இன்றைக்கும் உலக மக்களின் விடுதலையின் அடையாளமாகக் காட்டப்படுகிறது. அமெரிக்க நாடு நினைவுச் சின்னங்களைப் பேணுவது, நூலகங்களைப் பராமரிப்பது என்பவற்றில் முன்னணி வகித்துக் கொண்டிருக்கிறது.

அமெரிக்காவில் நியூயார்க் நகரில் இருந்த இரட்டைக் கோபுரத்தின் மீது நடந்த தீவிரவாத தாக்குதல் அமெரிக்காவை உலுக்கிப் போட்டது. வளமையும், வலிமையும் கொண்ட அந்த அமெரிக்க நாட்டிற்கு இரட்டைக் கோபுரத் தாக்குதல் அந்த நாட்டின் ஆளுமைக்கு விடுக்கப்பட்ட சவாலாக அமெரிக்க நாட்டு மக்கள் நினைத்தார்கள். குறிப்பாக அந்தத் தீவிரவாதத் தாக்குதல் எந்நாளும் அமெரிக்க மக்களின் மனதில் ஆழமான காயத்தை ஏற்படுத்தி வடுமாறாமல் இன்றும் இருக்கிறது. தங்களது தேசத்திற்கு விடுக்கப்பட்ட சவாலாக, அறைகூவலாக அமெரிக்க நாட்டு மக்கள் எடுத்துக்கொண்டு குறிப்பாக அந்தத் தீவிரவாதத் தாக்குதலை ஆவணப்படுத்தியிருக்கிறார்கள். இரட்டைக் கோபுரத் தாக்குதல் எப்படி நடந்தது? அதன் அரங்கேற்றம் எப்படி? எப்போது திட்டமிடப்பட்டது? என்பது பற்றியும் அல்குவைதா தீவிரவாதத் தாக்குதல்கள் பற்றியும், அதனுடைய பின்புலங்கள் என்ன? என்பவற்றைப் பற்றியெல்லாம் விரிவாக, மிகவும் தெளிவாக நினைவுக் காட்சியகமாக அமெரிக்கா ஆவணப்படுத்தியிருக்கிறது. பொதுவாக, அமெரிக்கா தேசப்பக்தியையும், தங்களுடைய நாட்டின் இறையாண்மைக்கு

விடுக்கப்பட்ட சவாலையும் எதிர்கொள்கிற விதமாக தீவிரவாதத் தாக்குதலினால் ஏற்பட்ட பாதிப்பையும், உலக வர்த்தக மையத்தைத் தாக்குதல் நடத்தியதையும் என்றைக்கும் அமெரிக்க மக்கள் மறந்துவிடாமல் இருக்கிற வகையில் ஆவணப்படுத்தியிருக்கிறார்கள். இதுதான் அமெரிக்க நாடு தன் தேசப்பக்தியை அடைகாத்துக் கொண்டிருப்பதற்கான அடையாளம்.

நாம் எங்கே போகிறோம்? அன்பையும், அகிம்சையையும் போதிக்கிற நம் இந்திய தேசம் அமெரிக்கா போன்ற நாடுகளிடம் கற்றுக் கொள்ள வேண்டியது என்ன? ஒவ்வொரு அமெரிக்கனும் நாட்டு விடுதலையைப் போராடிப் பெற்றதைப் போல, நாட்டிற்கு ஏற்பட்ட தீவிரவாத, பயங்கரவாத தாக்குதலை என்றும் மறந்துவிடாமல் இதயத்தில் நினைவுகூர்ந்து, அப்படியொரு தாக்குதல் மீண்டும் நிகழ்ந்துவிடாத வண்ணம் பாதுகாப்பு உணர்வோடும், விழிப்புணர்வோடும் ஒவ்வொரு அமெரிக்கனும் வாழுகிற சூழலை உணர முடிந்தது. பொதுவாக, அமெரிக்க மக்கள் தேனீக்களைப் போல சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறார்கள். அமெரிக்க வாழ் தமிழர்கள் பட்டாம்பூச்சிகளைப் போல பறந்து கொண்டிருக்கிறார்கள். அன்பால் நனைந்து கொண்டிருக்கிறார்கள்.

அமெரிக்காவிடம் நாம் கற்றுக்கொள்ள வேண்டியது என்ன? முகம் தெரியாத நபர்களிடமும் கூட முகமலர்ச்சியோடு வரவேற்கிற, வணக்கம் செலுத்துகிற, தோழமை உணர்வை வெளிப்படுத்துகிற பாங்கு. குழந்தைகள் வளர்ப்பில் காட்டுகிற அதீத அக்கறை, எந்தக் குழந்தையையும் அன்பால் அரவணைத்து வளர்க்க வேண்டும் என்ற அமெரிக்க நாட்டுச் சட்டங்கள் கண்காணிப்போடு பேணப்படுகிறது. அதைப்போல, தங்கள் வேலைகளைத் தாங்களே செய்கிற நிலை. எல்லோரும் உழைக்கிற மனநிலை. ஓய்வின்றி உழைத்துக் கொண்டிருக்கிற அமெரிக்க வாழ் தமிழர்கள். விருந்தோம்பலுக்கும், பிறரைப் போற்றுவதற்கும் தங்கள் தொப்புள் கொடி உறவாகிய தாயகத்தை அவர்கள் நினைவு கூர்வதும் அவர்களிடம் இருக்கிற தனித்தன்மைகள்.

தமிழ் மொழியின் வளர்ச்சிக்காக அமெரிக்க மண்ணிலிருந்து உலகத் தமிழ் மாநாட்டை நடத்துகிற அவர்களின் பாங்கு மிகவும் சிறப்புக்குரியது. அவர்கள் பல தளங்களில் பணியாற்றியபோதும் தமிழ்

மொழி வளர்ச்சிக்காகத் தங்களை அர்ப்பணித்துக்கொண்டு பணியாற்றுகிறார்கள்.

"வீரன் ஒருமுறை சாகின்றான். கோழை பலமுறை சாகின்றான்" என்று ஜூலியஸ் சீஸர் கூறுவார். ஆம். மகாத்மா காந்தியடிகள் நடத்திய அகிம்சைப் போராட்டம் ஜூலியஸ் சீஸரின் வாக்கிற்கு முன்பு நம் தமிழ் மண்ணில் அப்பர் பெருமான் "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்றார். எமனுக்கு அஞ்சாத மரணத்தை வெல்கிற வாழ்க்கையைக் காட்டுகிறார். "காலா.... என் காலருகே வாடா....." என்று மரண பயமில்லாது பாரதி மரணத்தை வரவேற்று பாடுகிறார். ஆக, அச்சமில்லா வாழ்வை அறப்போரில் சந்தித்தவர் மகாத்மா காந்தியடிகள். யாரால் முடியும்?

பாஸ்டன் தேநீர் விருந்து என்ற அமெரிக்க சுதந்திரத்திற்கு வித்திட்ட அந்த நிகழ்வு வரலாற்றில் இடம்பெற்றது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போரிட்ட முதல் போராட்டம அது. ஆனால், மகாத்மா காந்தியடிகள் அதே பிரிட்டிஷ் வைஸ்ராயை நேருக்கு நேர் அவர் மாளிகையில் சந்தித்து தேநீர் விருந்தை வைஸ்ராய் இர்வின் பிரபு தருகிறபோது ஒப்பந்தத்தில் கையெழுத்திடும முன்பு தன் ஆடையில் வைத்திருந்த உப்பை எடுத்து தேநீரில் கலந்து இது தான் பாஸ்டனின் தேநீர் விருந்து என்று சொன்ன அந்தத் துணிச்சலை, உண்மையை, வாய்மையை எண்ணிப் பார்க்கிறபோது அவர் நடத்திய அறப் போராட்டத்தின் சத்திய வாழ்வு நமக்குப் புரிகிறது. துணிவின் வாழ்வு புரிகிறது. எத்தனை பேர் நம்மில் மகாத்மாவாக உருவாக இருக்கிறோம்?

பாஸ்டன் தேநீர் விருந்து போராட்டமும், தண்டியாத்திரை உப்புச் சத்தியாகிரகப் போராட்டமும் நமக்குச் சுதந்திர உணர்வை ஊட்டும் நிகழ்வாக வரலாற்றில் இருந்தபோதும் அறப்போராட்டத்தின் வலிமையை உலகத்திற்கு உணர்த்துகிற வகையில் அமெரிக்காவும், இந்தியாவும் சுதந்திரப் பாதையில் ஒரே உணர்வில் நின்றபோதும் இந்தியா விடுதலைக்காகக் கொடுத்த விலை உலகத்தில் எந்த நாடும் கொடுக்காத விலை. அன்பு, அகிம்சை, சத்தியவாழ்வு, மனிதகுலத்தின் சமத்துவம், பெண்ணினத்தின் முன்னேற்றம் என்ற இலக்குகளோடுதான் நம் நாட்டு சுதந்திரப் பாதையில் மகாத்மா காந்தியடிகள் வழிநடத்தினார். அந்தப் பாதை இன்று எப்படி இருக்கிறது?

மதுவிலக்கு அவசியம் என்று வலியுறுத்திய மகாத்மாவின் பாதை, தீண்டாமை இல்லாத சமுதாயம் வேண்டும் என்று போராடிய

மகாத்மாவின் பாதை, இந்து – முஸ்லீம் ஒற்றுமையே வாழ்வின் இலட்சியம் என்று நினைத்த மகாத்மாவின் பாதை, பெண்களின் முன்னேற்றம் அவசியம் என்று போரடிய மகாத்மாவின் பாதை இன்று கரடு முரடாக இருக்கிறது. அதைச் செப்பனிடுவதற்கு மட்டுமல்ல அந்தப் பாதையில் துணிவோடு செயல்படுவதற்கு இளைய தலைமுறை தயாராக வேண்டும். உண்மையோடும், நேர்மையோடும்ட சத்தியத்தின் பாதையில் அகிம்சையின் தடத்தில் அறிவை வலிமைப்படுத்தி அன்பை ஊற்றெடுக்கச் செய்து மனித குலத்தை நேசிக்கிற அந்தத் தடத்தில் நாம் பயணிப்போம். அதுதான் நாட்டின் சுதந்திரத்திற்கு நாம் கொடுத்த விலையை சரியாகப் பேணிக்காக்கின்ற நிலையாகும்.

---

அறிவியல் கண்டுபிடிப்புகளை மேற்கொண்ட விஞ்ஞானிகள் இரவு பகலை, தூக்கத்தை, பசியை மறந்து, மனிதகுல மேன்மைக்காக ஆய்வுக்கூடத்தில் தவம் கிடந்தார்கள். அப்படித் தவம் கிடந்தவர்களில் ஒருவர் சர்.சி.வி.ராமன். நம் மண்ணைச் சேர்ந்த மகத்தான இயற்பியல் விஞ்ஞானி. உடல் நோய்வாய்ப்பட்டிருந்த நிலையிலும், அவருடைய ஆராய்ச்சி, அவருக்கு நோபல் பரிசைப் பெற்றுத் தந்தது. அது, "ராமன் விளைவு" என்ற அவருடைய ஆய்வுக்குக் கிடைத்த பரிசு.

நோபல் பரிசு பெறுவதற்கான கடிதங்கள் அவருக்குக் கிடைப்பதற்கே அன்றைய ஆங்கில ஏகாதிபத்தியம் பல வழிகளில் முட்டுக்கட்டை போட்டுப் பார்த்தது. கடைசியில் அவர் நோபல் பரிசு பெறுவதற்கு அனுமதித்து விட்டு, "வேறு எதைப்பற்றியும் பேசக்கூடாது. நோபல் பரிசு மட்டும் பெற்றுவரவேண்டும்" என்று உத்தரவு போட்டது.

சி.வி.ராமன் நோபல் பரிசைப் பெற்றுக்கொண்டார். அதோடு விடவில்லை. "இந்திய நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடும் விடுதலை வீரர்களுக்கு இந்தப் பரிசை நான் அர்ப்பணிக்கிறேன்" என்று தைரியமாகச் சொல்லிவிட்டு வந்தார். அதனால்தான், "ராமன் விளைவு" ஆய்வு முடிவை அவர் வெளியிட்ட தினமான பிப்ரவரி 28–ஆம் தேதியை, அவரைப் பெருமைப்படுத்தும் விதமாக இந்தியா, "தேசிய அறிவியல் தின"மாக அறிவித்தது; கொண்டாடி வருகிறது.

– பொன்னம்பல அடிகளார்

(நன்றி:அன்பே தவம் – பக்கம் 123)

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# திருவாசக உவமைகள்

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## மரப்பொந்தும் மனப்பொந்தும்

சாலை ஓரத்தில் வழிச் செல்வோர் நலனுக்காக நிழல் தரும் மரங்கள் வைத்து வளர்க்கப்பெற்றுள்ளன. அம்மரங்களிற் சிலவற்றில் கவனக் குறைவின் காரணமாகவும், வலிமையான உள்ளீடின்மையின் காரணமாகவும் பொந்துகள் விழுவதுண்டு. வழிப்போக்கர்களில் பொறுப்புணராத மனிதர்கள், தாம் புகைத்ததுபோக எஞ்சிய துண்டுப் பீடியை அந்தப் பொந்தில் போட்டுச் சுற்றிலும் கிடக்கும் சருகுகளையும் அள்ளிப் போடுவார்கள். மற்றவர்கள் கட்புலனுக்கு வராத இடத்தில் துண்டுப் பீடியில் இருந்த தீ, உள்ளூரப் புகைந்து எரிந்து அம்மரம் அழியக்கூடிய அல்லது முறிந்துவிழக்கூடிய நிலையில்தான் தீ வெளிப்படும். அந்த நிலையில் அந்த மரத்தை என்ன செய்தாலும் காப்பாற்ற முடியாது. இது அன்றாடம் சாதாரணமாக நாட்டில் நடைபெறும் நிகழ்ச்சி. இந்த எளிய காட்சி அரிய பொருளை விளக்கும் உவமையாகத் திருவாசகத்தில் இடம்பெற்றுள்ளது.

உயிர், இறவாத இன்ப அன்பில் திளைத்து இன்புற வேண்டும் - நலமுற வேண்டும் என்றதிருவருள் நோக்கத்தினாலேயே உயிருக்குப் பொறிபுலன்களோடு கூடிய வாழ்க்கை கிடைத்தது. ஆனாலும், கவனக்குறைவின் காரணமாகவும் கருத்து இன்மையாலும் உயிர் இன்புறுதலுக்குப் பதிலாக ஆறாத் துயரில் ஆழ்கிறது. இதற்குக் காரணம் பொறிபுலன்களோடு கூடிய வாழ்வியல் நடத்தும் உயிரிடத்தில் ஆசையென்ற பொந்து விழுந்துவிடுகிறது. "ஆசை மோசம்" என்பது அனுபவ மொழி.

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்"

என்கிறது திருமந்திரம். தமிழ்மறை தந்த திருவள்ளுவரும் "மேன்மேலும் துன்பச் சார்புடைய பிறப்பை விளைக்கும் வித்து ஆசையே" என்கின்றார். மாணிக்கவாசகரும் "அவா வெள்ளக் கள்வனேனை" என்று குறிப்பிடுகின்றார். ஆதலால், உயிரியல் நல்வாழ்க்கையைக் கெடுக்கும் பொந்து ஆசையேயாகும். இங்கு ஆசை என்று குறிப்பிடும்பொழுது,

இறைவனாலேயே வழங்கியருளப்பெறுகின்ற பொன், பொருள், போகத்தை விரும்புவதா கூடாதா என்ற வினா எழும். தேவையை விரும்புதல் ஆசையென்று சொல்லப்பெறுவதில்லை. மாணிக்கவாசகரும், "வேண்டத்தக்கது அறிவோய் நீ வேண்ட முழுவதும் தருவோய் நீ" என்று குறிப்பிடுவது சிந்தித்து உணரத்தக்கது. தகுதியில்லாத ஒன்றினை விரும்புதல் ஆசை. அதுமட்டுமல்ல, சாதனத்தையே சாத்தியமாகக் கருதிக் காமுறுதலும் ஆசையே. உதாரணமாகப் பொருள்களைப் பெற்றுத் துய்த்து வாழப் பொன் தேவை. அந்த அளவிற்குப் பொன்னை விரும்புதல் பிழையன்று. அளவிற்கு மேலாகத் துய்க்கவும், அத்தோடு தானும் துய்க்காமல் பிறரையும் துய்க்கச் செய்யாமல் பொன் காக்கும் பூதமாக வாழ்தலும் ஆசையின் பாற்பட்ட வாழ்க்கை. கடுங்கோடை - மண் சுடுகிறது - அந்த நேரத்தில் காலில் அணிந்து கொள்ளும் செருப்பைப் பெற்ற ஒருவன், செருப்பைக் கையில் தூக்கிக்கொண்டு சுடுமணலில் நடந்து துயர்ப்படுவானானால் அது இரங்கத்தக்கதல்லவா? அவனுடைய உணர்வில் செருப்பின் பயனைவிட செருப்பு அதிகப்படியான இடத்தைப் பெற்றுவிடுகிறது. இத்தகு வாழ்க்கை ஆசைக்கோர் எடுத்துக்காட்டு.

இத்தகைய ஆசையென்ற பொந்தில் துய்த்தல் என்ற நெருப்பை யாராவது இட்டுவிட்டால் அந்தத் தீ உள்ளுக்குள்ளேயே புகைந்து எரிகிறது. புலன்கள், வேட்கை என்ற வெப்பத்தால் புகைந்து எரிந்து வெதும்புகின்றன. இந்த நிலையில் திருவருளே உயிரைக் காப்பாற்ற வேண்டும்; அதுவும் உடனடியாகக் காப்பாற்ற வேண்டும். வருந்தும்போது காப்பாற்றுதல் முடியும். ஆனால் அழிந்து போன பிறகு காப்பாற்றுதல் என்பது இயலாத ஒன்று. ஆதலால், ஆசை என்ற பொந்து ஏற்பட்டு அதில் துய்த்தல் என்ற தீ பற்றி எரிவதன் மூலம் தான் அழிந்துபடாமல் காப்பாற்று என்று விண்ணப்பிக்கின்றார் மாணிக்கவாசகர். இத்தகைய கருத்தை விளக்கும் பாடல் இதோ:

*"பொதும்புறு தீப்போற்*
*புகைதெரி யாப்புலன் தீக்கதுவ*
*வெதும்புறு வேனை*
*விடுதிகண் டாய்விரை யார்நறவம்*
*ததும்புமந் தாரத்திற்*
*றாரம் பயிற்றுமந் தம்முரல்வண்*
*டதும்புங் கொழுந்தேன்*
*அவிர்சடை வானத் தடலரசே"*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# ஞானாமிர்த சாரம்

## குன்றக்குடியில் 29.12.1939இல் நடைபெற்ற சைவசித்தாந்த மகா சமாசக் கருத்தரங்கச் சொற்பொழிவு

(உரைவேந்தர். ஔவை. துரைசாமி பிள்ளை)

சமாசத்தின் "சிவநெறிச் சிந்தனை" தொகுப்பு நூலிலிருந்து

ஆண்டவன் அருளிய ஆகமங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதமாக நடக்கும் என்றும், ஞானபாதம் பதி, பசு, பாசம் என்பதை உரைப்பது என்றும் நாம் கேட்டிருக்கின்றோம். ஆனால், இந்நூல் "திருமிகு ஞானம், இலங்கொளி யோகம், நலங்கிளர் கிரியை, சரியையென்ற விரிதருபாதம்" நான்கு என்று முறைசெய்து கொண்டு, ஞானபாதத்தைப் பதி பசு பாசம் என்று முறை செய்யாது. பசுவும், பாசமும், பதியும் என்று முறை செய்துகொள்கின்றது. ஞானபாதம் "பசுபாசத்தொடு பதியாய் பெற்றி" என்றே ஆசிரியர் நமக்கு வழங்குகின்றார். பசுவின் இயல்பைப் பத்துப்பாட்டிலும், பாசத்தின் தனியியல்புகளை ஒன்பது பாட்டுக்களிலும், பசுபாசப் பிணைப்பும் வீடும் முப்பத்தாறு பாட்டுக்களிலும், பதியியல்புகளை இருபது பாட்டுக்களிலும் உரைக்கின்றார். மேலும், இந்நூல், பாயிரம், சம்மிய ஞானம், சம்மிய தரிசனம், பாசபந்தம், தேகாந்தரம், பாசவனாதி, பாசச் சேதம், பதியுண்மை உணர்த்தல், பாசமோசனம் என ஒன்பது வகையாக வகுத்து ஆராயப்பட்டிருக்கின்றது. இனி, அம்முறையைப் பின்பற்றாது. இந்நூலின் சாரத்தையே ஒரு வகையாய்ச் சுருங்கக்கூறி என் சொற்பொழிவை முடித்துக் கொள்கின்றேன்.

இனி, பசு, பாசம், பதி என்ற மூன்றனுள் பசு என்பதும் பதி என்பதும் அறிவுடைய சித்துப் பொருள்களாகும். பசுவை உயிர் என்றும், சீவன் என்றும்; ஆன்மா என்றும், பதியை இறைவன் என்றும் சிவன் என்றும் கூறுவர். இவை அனாதியாகவும், நித்தமாகவும் உள்ளனவாகும். முதலாக எடுக்கப்பட்ட சீவன் அனாதியே ஆணவமல சம்பந்தமுற்றுத் தன்னறிவு பெரிதும் மறைப்புண்டு. உரிமை குன்றிப் பிணிப்புடையதாயிற்று. அதனால் இதனை ஆராய்ந்து கண்ட அறிஞர், இதனைப் பசு என்றே கூறலாயினர். பசு என்ற வடமொழிச் சொல்லுக்குக் கட்டப்பட்டது என்பதே பொருளாகும். சீவனைப் பற்றிப் பிணித்து நிற்கும் ஆணவம் மாயை, கன்மம் என்பவைகளைப் பாசம் என்றும் கூறுவர். பாசத்தால் பிணிப்புண்டு அறியாமை பெரிதும் அறிவு சிறிதும் உடையது பசு என்று கூறுங்கால், அறிவும் அறியாமையும் ஓரிடத்தில் எவ்வாறு நிற்கமுடியும் என்று ஒரு கேள்வி பிறக்கின்றது. அதற்கு, இந்நூலாசிரியர், தீக்கடைக்கோலை

எடுத்துக்காட்டி, கடையுங்காறும் கோலோடு கிடந்து, கடைந்தவழிப் பிறந்து, அதனையே அழிக்கும் தீப்போல, அறிவும், அறியாமையொடு விரவிக்கிடந்து, பக்குவம் வந்தவழித் தான் விளங்கித் தோன்றி, அறியாமையை அழித்து உண்மை அறிவாய்த் துலங்கும் என்பார்.

*"ஒல்லா வல்லழல் போல, நல்லோய்!*
*ஞானமும் இன்மையும் நலம்மிக்கு*
*ஆனா உயிர்கட்கு உணர்வு அனைவகையே"* - (ஞானா-70)

என்று கூறுகின்றார்.

இனி, பதிப்பொருளாகிய சிவன். சீவன்களைப்போல மலப்பற்று இல்லாத அறிவுப் பிழம்பாகும். ஆயினும், சீவன்களைப் போலச் சித்துப் பொருளாகிய இது, மலமில்லாமலும், சீவன்கள் மலமுடையனவாயும் இருப்பதற்குக் காரணம் கூறுவர். பளிங்குக்கு ஒளியும், செம்பிற்குக் களிம்பும்போல் இவை அனாதி என்றும் இஃது ஆன்றோர் அறிந்துரைத்த அருண்மொழி என்றும் கூறுகின்றார்.

*"அம்ம சீருணம்*
*திகழொளிப் பளிங்கு போலப் புகழரும்*
*இறை புற்கலனுக்(கு) என்றனன் குறைவின்று*
*அறைகழல் அருளொலி பரந்த*
*பொறைவளர் சாரல் அறவ னோனே"* - ஞானா -9

என்பதனால் இது விளங்கும்.

இவ்வாறு, அனாதியே மலசம்பந்தமுற்றுப் பசுவாகிய உயிர்பால் அருள்மிகக்கொண்ட பரமனுக்கு, அதனை அப்பிணிப்பினின்றும் விடுவிக்கவேண்டுமென்ற திருவுள்ள முண்டாகின்றது. அவன் எல்லா வல்லமையும் உடையவனாதலால் தன் சத்தி சங்கற்பத்தால் மாயையைக் கலக்கி, அதனால் உடல், கருவி, உலகு, நுகர்ச்சி எனப்படும் தனு கரண புவன போகங்களைப் படைத்து, அவற்றில் இச்சீவன்களைப் புகுத்தி, தம்மைப் பற்றி நிற்கும் மலவழுக்கைப் போக்கிக் கொள்ளுமாறு அருளுகின்றான். இவற்றிற்கு முதற்காரணமாகிய மாயை என்பது பாசவகையுள் கூறிய ஒன்றாகும். இதுவும் உயிரைப் பற்றி நிற்பதாயினும் ஆணவத்தால் உண்டாகிய அறியாமையை உடைப்பதற்குப் பெருந்துணை செய்வதாகும். இதுவும் அனாதியானது; உயிர்போல் பதியின் சக்தியில் ஒடுங்கி, அவன் சங்கற்பித்தவழி மீளத் தோன்றும் இயல்புடையது. அதனால் ஆணவத்தை இயற்கை மலம் (சகச மலம்) என்றும், மாயையைச் செயற்கை மலம் (ஆகந்துக மலம்) என்றும் அறிஞர் கூறியிருக்கின்றனர். இந்த மாயையின் காரியமாகத் தோன்றியுள்ள உடல், கரணம், உலகு முதலியவை அசேதனமாக இருப்பதால், இம்மாயை அசேதனமாகும். ஆதலால்தான், இதனை

*"வாலிய சேதனமன்றுஇது, தீதறு செயல்கள்*
*கோதுக அசேதன மாதலின்; அலதேல்*
*காரணம் நியமம் என்னும் பேரிசை*
*எல்லாம் உடைக்கும் பொல்லாத் தோடம்*
*வல்லே எய்தும்"* - ஞானா-21

என்கின்றார்.

மேலும் இந்த மாயை, தன் காரியப்பொருளால்ஆன்மாவைப் பற்றியுள்ள மலம் அறுமளவும் விடாது தொடர்ந்து, அற்றவழி, ஆண்டவனது சக்தியில் ஒடுங்கிப் பின் அவன் திருவுள்ளப்படி மீளத் தோன்றுவதாகும்.

*"ஓதுமாயா காரியம் நிற்பது, முடிவில், சீரிய*
*சக்தி வடிவிற் பொற்பொடு புணர்ந்து*
*தொடங்கற் காலை வலம்பட விளங்கும்;*
*ஆருயிர் ஏரிசைப் போகம்*
*சீரிதின் அருந்தத் திகழ்தனு முதலே"* - ஞானா-21

என்று இதனை விளக்குகின்றார். இதன்கண் ஆருயிர் போகம் அருந்தத் திகழ்தனு கரணாதிகளுக்கு முதலாகிய மாயை என்றதனால், இது பரமன் அருள் மிகுதி அருள்மிகுதிபால் வேலை செய்வது என்பது பெறப்படும். ஆனால், அறியாமை மிக்கு வருந்தும் உயிர்கள் இதன் உண்மையினைத் தம் அறிவால் ஆராய்ந்து காணாது இவற்றிற்கே அடிமையாகி, கன்மங்கள் பல செய்து மீளமீளப் பிறந்து இறந்து உழலுகின்றன. மலம் அறாமையின் உடலும் கருவியும் பிறவும் உயிர்களைச் சூழ்ந்து தொடர்ந்த வண்ணமே இருக்கின்றன. உயிர்வகையின் தோற்றம் குறித்து அமைந்த காமவுணர்ச்சி, தீங்குகளுக்கும் காரணமாதல்போல, பல நீக்கத்துக்கென வந்த தனுகரணாதிகளை உயிர்கள் பிறப்பிறப்புக்களுக்கும் இன்ப துன்பங்களுக்கும் காரணமாக்கிக் கொள்கின்றன. ஆகவே, அறியாமை கொண்டு உயிரை மறைத்துத் துன்பம் உறுவிக்கும் ஆணவத்தைக் கெடுக்கப் புகுந்த ஆண்டவன் மாயா காரியமாகிய பிறிதொரு துன்பக் காரியத்தை உண்டுபண்ணுவது என்னை? என்றொரு வினா நிகழ்கின்றது. இதற்கு ஆசிரியர்

*".... உடையுறு*
*கறைகடி தகற்றப் பிறகறை பிடித்த*
*பெற்றியின் இவனுக் குற்ற வான்பிணி"* - ஞானா -10

என்றும், மாயாகாரியமாகிய தனகரணாதிகளைப் பாரிசேடப் பிரமாணத்தால் ஆன்மாவின் மலநீக்கத்துக்கென்றே ஆண்டவன் படைத்துளன் என்பார்.

*"காரியம் காசினி யாதி; ஏரியல்*
*ஈசன் கத்தா; இவற்கிது போகம்*
*ஆதல் செல்லாது; அகன்றுயர் கருமம்*
*தானோ நுகர்தல் செல்லாது; ஆனாது*
*என்னை செய்தது என்னின், அன்னோ*
*கொன்னே செய்யான், தன்நேர் இல்லோன்;*
*பாரி சேட மதனிற் பரனுக்கு*
*ஏரியல் பரன்பசு என்றறி இனிதே"* (ஞானம்-12)

என்றும் கூறியுள்ளார். இவ்வாறு, உயிர்களைத் தனுகரணாதிகளில் கூட்டிப் பந்தியாதுவிடின், இவற்றிற்கு விடுதலை (வீடுபேறு) இல்லை என்றற்கு,

*"விரவிய பந்தம்*
*கூடா தோடின் குலவிய போகம்*
*துய்த்தல் செல்லான்; செல்லா னாக*
*எய்த்தல் இன்றாம் இருவினை யாக*
*அபவர்க்கமும் மற்று அடையான்"*

என்று கூறுகின்றார்.

இங்ஙனம், ஆன்மாவிற்கு உதவியாக வந்துள்ள உடல், கரணம், உலகம், போகம் முதலியவற்றை அது நன்கு ஆராய்ந்து கண்டு அவற்றிற்கே அடிமையாகாது. பாசச் சேதம் விரும்பி அதற்குரிய முயற்சியில் இறங்கிக் கன்மச் சேத உபாயத்தால் மலங்களைப் போக்கி உண்மை ஞானம் பெற்று விடுதலையாகிய சிவபோகம் துய்த்தல் வேண்டும்.

*"பயன்பல மாந்தி வியந்துறை காலை*
*வல்வினை எல்லை செல்லாக் காலத்து*
*ஒல்லென ஒப்ப உயர்பெருஞ் சிவனது*
*சத்தி நிபாதம் தழைப்ப மெய்த்தகு*
*குருபரம் பரனது அருளின் செவ்வி"*
*வம்பறு சம்பிர தாயத் தஞ்சுடர்*
*உற்ற காலைச் சொற்றொடர் பற்றுத்*
*தேயாது யாவுமாய் அறிவகன்ற*
*ஆயாச் சிவனது அணிகிளர் சீர்த்தி*
*நின்மலத் தியையும் பின்மலத்து இயையான்*
*அந்தமில் பந்தம் மற்று இ(வ்)வணம்*
*சிந்துதல் சிந்தல் தெரியுங் காலே"*

எனக் கன்மச்சேத உபாயத்தால் மலநீக்கமும் வீடுபேறும் எய்தும் வகையை விளக்குகிறார்.

(தொடரும்)

# சிலப்பதிகாரமும் இசைத்தமிழும்

(தருமையாதீனப் புலவர். தா. குருசாமி தேசிகர்)

"நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்" என்றார் பாரதியார். அதற்குக் காரணம் முத்தமிழும் விரவி இருப்பதேயாகும். இளங்கோவடிகள் காலத்தில் இசைவாணர்பலர் இசைத்தமிழ் வளர்த்த பாணர்களாலும், இயற்றமிழ் வளர்த்த நல்லிசைப் புலவர்களாலும், ஆடல் பாடல்வல்ல விறலியர்களாலும் முத்தமிழ்வளர்ச்சி உச்சம் பெற்றிருந்தது. முத்தமிழும் கற்ற இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் மூலமாகப் பதிவுசெய்து வழங்கியது நாம் பெற்ற பேறாகும்.

முத்தமிழில் இசையும் நாடகமும் பற்றி நூல்கள் தமிழில் பிறசமய வரவாலும், காமத்தை விளைவிக்கும் என்ற நோக்கிலும் புறந்தள்ளப்பட்டன. சிலப்பதிகாரத்தில் அரங்கேற்றுகாதை முதலிய இசை நுணுக்கமிக்க வரிப்பாடல்கள், பண்டைத் தமிழரின் இசைப் பேரறிவை மெய்ப்பிக்க அரியசான்றாக விளங்குகின்றன. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் சம்பந்தர் அழிந்துபோன இசைக்குறிப்புமிக்க பாடல்களை இசைமுழுதும் மெய்யறிவே மேலோங்கப்பாடி, இசைத்தமிழை வளர்த்திட்டார். "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்" என்று சுந்தரர் குறிப்பிடுகிறார். முத்தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரக் காப்பியம் இயற்றமிழில் அமைந்துள்ளது. வழக்குரைகாதை நாடகமாகவும், கானல்வரியும், ஆய்ச்சியர் குரவையும், இசைத்தமிழாகவும் அமைந்துள்ளன. அப்பரடிகள் "முத்தமிழும் நான்மறையும் ஆனான் கண்டாய்" என்று முத்தமிழின் பொருளாக இறைவன் உள்ளார் என்பார்.

**இளங்கோவின் இசைப்புலமை :**

சிலம்பில் அடிகள், இசைக்குத் தனி இடம் தந்துள்ளார். சிலம்பிற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் பல இடங்களில் இசைபற்றிய முன்நூல்களை எடுத்துக்காட்டி விளக்கம் கூறுவார். இசைவாணர் பாடும் முறையை இளங்கோவடிகள் குறிப்பிடும் செய்திகள் அறியத்தக்கன :

*"யாழும் குழலும் சீரும் மிடறும்*
*தாழ்குரல் தண்ணுமை ஆடலோடு இவற்றின்*
*வரிக்கும் ஆடற்கும் உரிப்பொருள் இயக்கித்*
*தேசிகத் திருவின் ஓசை கடைபிடித்துத்*
*தேசிகத்திருவின் ஓசைஎல்லாம்*
*ஆசின்று உணர்ந்த அறிவினன் ஆகிக்*
*கவியது குறிப்பும் ஆடல்தொகுதியும்*
*பகுதிப்பாடலும் கொளுத்தும் காலை*
*வசையறு கேள்வி வகுத்தனன் விரிக்கும்*
*அசையா மரபின் இசையோன்"* (சிலப்-3:26:36)

என்று இசைக்கலைஞர் பாடும் முறையும், ஆடும் விறலியர் பாவகமும், பக்கவாத்தியங்களும் சித்தரிக்கப்படுவது கொண்டு அந்த முறை இன்று இசைவலார்கள் கடைப்பிடித்து வருவதையும் ஒப்பிட்டுக் உணரலாம்.

தொல்காப்பியத்தில் இசைபற்றிய குறிப்புகள் உள்ளன. பண்ணை உடையது பண்ணத்தி என்பார்.

*" பாட்டிடைக் கலந்த பொருளவாகி*
*பாட்டில் இயல் பண்ணத்தி இயல்பே*
*அடியின் சிறப்பே பாட்டெனப்படுமே"*

எனப் பாட்டு பற்றி விளக்கம் தருவார்.

சிலம்பில், மங்கலவாழ்த்துப் பாடல், "ஞாயிறு போற்றுதும்", "திங்களைப் போற்றுதும்" முதலியவை இசைத்தமிழ் நுணுக்கத்தையும், அதனைக் காப்பியத்துள் முதன்மைப் படுத்தும் பாங்கையும் காட்டுகின்றது. கானல்வரியும், மனையறம்படுத்த காதையில் கோவலன் பாராட்டும் வரிகளும், இசைக்காகவே அடிகளார் எழுதியுள்ளார் என்று ஆய்வாளர்கள் கூறுவர்.

மேலும் ஆய்வாளர் கூறுவன சிந்தனைக்குரியன :

*" சிலம்பின் வேட்டுவரியில் முன்றில்சிறப்பு*
*வள்ளிக்கூத்து, முன்னிலைப்பரவல், கூத்துள்*
*படுதல், வெட்சி... முதலிய தலைப்பில் உள்ள*
*பத்துப்பாடல்கள் இசையோடு பாடுவதற்கு*
*ஏற்றவை"* (சிலம்பில் இசைப்பாடல்கள் பக்கம். 47)

என்ற கருத்துகள் தமிழுக்கே உரியன. கருநாடக இசையில் "ஜனகராகம்" "ஜன்யராகம்" என்று குறிப்பிடப்படுபவை, தமிழிசையில் முறையே "பெரும்

பண்பாலை" - "திறம்" எனக்குறிப்பிடப்படுகின்றன. "இராகம்" என்பது பண் எனவும், "தாளம்" "பாணி" எனவும் குறிப்பிடப்படுகின்றது.

"ஆலாபனை" என்று இன்று குறிப்பிடப்படும் பண்ணின் தொழிலை சிலம்பு அரங்கேற்றுகாதையில், பாடத் தொடங்குவோர் செயலை "ஆளத்தி" என்று தமிழ்ச்சொல்லால் குறிப்பிடப்படுவதும் அதன் எடுத்துக்காட்டும், அறியத்தக்கன.

*"மகரத்தின் ஒற்றால் சுருதி விரவும்*
*பகருங் குடில் நெடில் பாரித்து*
*நிகரிலாத் தென்னா தெனாவென்று*
*பாடுவரேல் ஆளத்தி"*

என்ற உரையாசிரியர் குறிப்பு, மாதவி ஆடத் தொடங்கும் முன்பு பாடலாசிரியர் ஆளத்தி செய்வதைக் குறிப்பிடும் பகுதியால், பண்டைத் தமிழர் இசைத்துறையில் பேரறிவு பெற்றிருந்ததைக் காட்டும்.

**சிலப்பதிகார இசைப்பாடல்கள் அமைந்த பகுதிகள் :**

1. மங்கலவாழ்த்துப்பாடல் 2. அரங்கேற்றுக்காதை 3. கானல்வரி 4. வேனிற்காதை, 5. வேட்டுவவரி, 6. புறஞ்சேரி இறுத்த காதை 7. ஆய்ச்சியர் குரவை 8. குன்றக் குரவை, 9. வாழ்த்துக்காதை இக் காதைகளில் இடம்பெறும் இசைப்பாடல் உருப்படிகள், பக்தி இலக்கியங்களில் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழிகளிலும், திருவாசகம், திருவருட்பா ஆகியவற்றிலும் உள்ள மகளிர் விளையாட்டுப் பாடல்களும் சிலம்பு பெற்றெடுத்த பிள்ளைகள் எனலாம்.

**பாடல்கள் சில ஒப்பிடல் :**

சிலப்பதிகாரத்தில், இடம்பெறும் குன்றக் குரவை, ஆய்ச்சியர் குரவை, வேட்டுவவரி, மூன்றும் தெய்வத்தைச் சுட்டிய வரிப்பாடல்களாகும். மக்களைச் சுட்டிய வரிப்பாடலாக கோவலன்பாடும் வரிப்பாடல் :

*"திங்கள் மாலைவெண்குடையான் சென்னி செங்கோலதுவோச்சிக்*
*கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய்வாழி காவேரி*
*கங்கைதன்னைப் புணர்ந்தாலும் புலவாதொழிதல் கயற்கண்ணாய்*
*மங்கைமாதர் பெருங்கற்பென்று அறிந்தேன் வாழி காவேரி"*

என்ற பாடல் மூன்றாம் அடி இடைமடக்கி வரும் பாடலாக அமைகிறத. இது "மடக்கு" அல்லது இயமகம் என்னும் அணியாம். ஓர் அடியில் ஈற்றுத் தொடர் அல்லது சொல் மீண்டும் அடுத்த அடியில் வருவது இதன்

இலக்கணம் என்பர். இதனை அடியொற்றி ஞானசம்பந்தர் பல பதிகம் பாடியதில் ஒன்று எடுத்துக்காட்டு :

*"திடமலி மதில்அணி சிறுகுடிமேவிய*
*படம்மலி அரவு உடையீரே*
*படம்மலி அரவு உடையீர்! உமைப்பணிபவர்*
*அடைவதும் அமருலகு அதுவே"*

என்ற சம்பந்தர் பாடல் முரிவரிப்பாடலாகும். முரித்துப் பாடுவது முரிவரியாகும். "யாழ்முரியும்" சம்பந்தர் பாடியது எடுத்துக்காட்டாகும்.

இவ்வாறு சிலப்பதிகாரத்தில் இசைப்பாடலும் - இசைக்குறிப்பும் மிகுந்துள்ளன. இதன் பரிமாணமாக, சம்பந்தர் பாடிய பதிகங்கள் அமைந்துள்ளன. ஆகவே சம்பந்தர் "இசைத் தமிழின் பிதா" என்றும், விட்டிசையை நீக்கி, கமகமாகிய நெட்டிசையை உருவாக்கியவர் என்றும், இசைத்தமிழ் வரலாறுடையார் (பக்கம் 30) பிடிஆர் கமலைத்தியாகராசன் கூறுவார். இவரது நூலுக்காக அழகப்பாபல்கலை, முனைவர் பட்டம் தந்து சிறப்பித்தது. நிறைவாக, சிலப்பதிகாரம் இசைத்தமிழின் இருப்பிடம் என்றும் அதனைக் கற்று குடந்தை சுந்தரேசனார், பதிகங்களை ஒப்பிட்டு இசை ஆய்வு செய்துள்ளார். ஓரளவு பறவைப் பார்வையாகச் சிந்திக்கப்பட்ட "சிலம்பின் இசைக் குறிப்புகள்" மேலும் விரிவாக ஆய்விற்குரியதும் ஆகும்.

---

## திருக்குறள் மற்றும் விளக்க உரையுடன் மணிக்கு ஒருமுறை ஒலிக்கும் மணிக்கூண்டு

புதுச்சேரி முத்தியால் பேட்டை காந்தி வீதியில் புதுப்பிக்கப்பட்டு திறக்கப்பட்ட பழமையான மணிக்கூண்டு, நேரத்தை அறிவிப்பதுடன், மணிக்கு ஒரு முறை திருக்குறள் வாசிப்பது மக்களிடையே வரவேற்பைப் பெற்றுள்ளது. வாழ்வியல் நெறிகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் திருக்குறளுக்கு நிகரில்லை. இந்தத் திருக்குறளை மக்கள் எளிதாக மனதில் நிறுத்திக்கொள்ளும் வகையில் நாள்தோறும் ஒரு மணி நேரத்துக்கு ஒருமுறை மணி அடிப்பதுடன், திருக்குறள் அதற்கான விளக்க உரையுடன் ஒலிக்கிறது புதுச்சேரியில் அமைந்துள்ள மணிக்கூண்டு. பொங்கல் முதல் இந்த புதியமுறை நடைமுறைக்கு வந்துள்ளது.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# சிலம்பில் தொல்காப்பியப் பதிவு – XIII

(தமிழாகரர். தெ. முருகசாமி)



தொல்காப்பியர் மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டித் தொல்காப்பியத்தைச் செய்வதாகத் தொல்காப்பியத்திற்கான சிறப்புப்பாயிரம் எழுதிய பனம்பாரனார் குறிக்கிறார். இதில் மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி – என்பதற்குச் சிறிதும் மயக்கமற்ற அடிப்படையில் நூலை எழுதுதற்கான திட்டவரையறையுடன் கற்பவர்கள் உணர்ந்து கொள்ளுமாறு செய்ததுதான் தொல்காப்பியம் என்பதாக எல்லா உரையாளர்களும் இலக்கண நூற்கேற்பப் பொதுவானதொரு விளக்கத்தைத் தந்துள்ளார்கள். இந்த அடிப்படையின் உண்மையில் இளங்கோவடிகள் இலக்கிய வகையில் சிலப்பதிகாரத்தைச் செய்துள்ளார் எனப் பொதுவாக உணரலாம்.

பாயிரம் சுட்டிய "எழுத்துமுறை" என்றது சிந்தனைக்குரியது, எழுதிக் காட்டுவதற்கான நெறிமுறை எனப் பொதுவாகப் பொருள்பட்டாலும் சிறப்பு நிலையில் எழுத்துடன் எழுத்தாலான சொல், சொல்லாலான தொடர் போல் அனைத்தையும் உணர்த்தும் பொருள் என்ற வகையில் பலவற்றைச் சுட்டி உணர்த்துமாறு உள்ளது. இந்த எழுத்து, சொல் என்ற இலக்கண அடிப்படையில்தான் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தைச் செய்துள்ளார்.

எழுத்திலக்கண நிலையில் ஓரெழுத்து ஈரெழுத்துகள் தனித்தும் சொற்களுக்குள்ளும் பயின்று வருங்கால் அவை உணர்த்தும் பொருள்

தொடர்பானவற்றைச் சிலப்பதிகாரக்கதைத் தொடர்புடன் முன்னர்க் கண்டோம். அதன் தொடர்ச்சியில் எழுத்தாலான சொல் மற்றும் சொற்றொடர் பற்றிய சொல்லிணக்கப் பொருண்மையைகக் கதைத் தொடர்புடன் கண்டுவரும் தொடர்ச்சியில் - மனித ஆற்றலுக்கும் (அமானுஷியத்திற்கும்) விஞ்சிய தெய்வீகத்தை உணர்த்துவதை இம்மூன்றாவது கட்டுரை வழி உணர்வோமாக!

எல்லாச் சொல்லுக்கும் பொருள் குறித்தனவே என்கிறது பெயரியல் நூற்பா, சொற்கள் அனைத்தும் வெற்றெனை நிற்காமல் பொருள் குறித்ததாகவே வரும் எனச் சொல்லின் பொது இலக்கணம் உணர்த்தப்பட்டதற்கேற்ப நூலின் தலைப்பான சிலப்பதிகாரம் என்றதுள் கலந்துள்ள கதை தழுவிய பான்மையைப் பாலுள் நெய்போல் முதலில் உணர வேண்டும்.

சிலம்பு என்ற மெல்லினச்சொல் சிலப்பு என வல்லினமாக மாறி அதிகாரம் என்ற சொல்லுடன் சேரச் சிலப்பதிகாரம் என்றானது. கதைதழுவிய நிலையில் மாதர் அணியும் அணிகலனாகிய சிலம்புதான் ஆங்காங்கே அதிகாரப்பட்டுக் கதையை நடத்திச் செல்கிறது என்ற உண்மையைக் காப்பியம் கற்போர் அனைவரும் உணர்வர்.

ஐம்பெரும் காப்பியப் பெயர்கள் யாவும் மகளிரின் அணிகலன்களின் பெயர்களாக உள்ளன. அவற்றுள் சிலம்பு மட்டும் இலக்கணத்திரிபில் சிலப்பு என மாறியதைக் கதை தழுவிய நிலையில் பொருத்தியுணருமாறுள்ளது.

வண்ணச்சீறடி மண்மகள் அறியா நிலையில் இல்லத்தளவில் இருந்த கண்ணகி அதாவது இல்லறத்தின் சீர் அணங்காக இருந்தவள் புகாரைவிட்டு மதுரைக்குப் பெயர்ந்ததும் ஓர் அணங்காய் உலகறியும் ஒப்பற்றவளாக மாற்றம் பெறுகிறாள். இம்மாற்றம் - வெஞ்சினமும் வஞ்சினமும் கெண்டதான போரணங்காய் மதுரை வீதியிலும் மாமன்னன் பாணடியனிடம் நீதிகேட்பதிலுமான தோற்றத்தால் உணர முடிகிறது. இதனால் மெல்லினச் சொல்லான சிலம்பு, வல்லினச் சொல்லான சிலப்பு என மாறியது உணரப்பட்டாலும் ஈண்டு வல்லினமாக மாறிய மாற்றமானது வலிந்து மாறியதாய் அல்லது மாற்றப்பட்டதான உண்மையையும் சேர்த்து உணரும் நிலையிலேயே உள்ளது எனலாம்.

இங்ஙனமாகக் கூறப்படும் நிலையில் சிலம்பு என்ற சொல் கண்ணகிக்குப் பொருத்தமாக உள்ளது என அவளின் தோற்றத்தில் உணர்ந்தாலும் அடுத்து சிலம்பின் அதிகாரச் செயல்திறத்தை அதிகாரம் என்ற சொற்பொருள் திறத்தால் கதை தழுவிய பாங்கோடு உணரவேண்டுமாய் உள்ளது.

அதிகாரம் என்ற சொல் அதிகரித்தல், மிகுதிப்படுதல், பெருகுதல் போன்ற பல கருத்துக்களின் உள்ளடக்கத்தை உணர்த்தினாலும் அதிகாரம் செய்தல், ஆட்சி செய்தல், ஆளுமை கொள்ளல், தலைமை ஏற்றல் என்ற செயல்திறனை உணர்த்துதலாக உள்ளதாய்த் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தமிழ் அகர முதலி (அகராதி) கூறுகிறது. கூறப்பட்ட எல்லாக் கருத்தோடும் சிலம்பையும் சிலம்பின் அதிகாரத்தையும் கதை தழுவிய அளவில் கொள்ளவேண்டும் எனத் தெரிகிறது. மேலும் இச்சொல் தொடர்பாகச் சித்தாந்தக் கடலான சிவஞான முனிவர் கூறும் கருத்தையும் ஈண்டறிதல் பொருத்தமாகும்.

அதிகாரம் இருவகைப்டும், அவற்றுள் ஒன்று. வேந்தன் இருந்துழி இருந்து தன் நிலம் முழுவதும் தன் ஆணையின் நடப்பச் செய்வதுபோல் ஒரு சொல் நின்றுழி பற்பல நூற்பா மற்றும் இயல்களில் தம் கருத்தே நுதலி வரச் செய்தல், மற்றொன்று வேந்தனது ஆணையைச் சென்று நடத்தும் தண்டத் தலைவர்போல் ஓரிடத்தில் நின்ற சொல் பல நூற்பாவுடன் சென்றியைந்து தன் கருத்தைப் பயப்பிப்பது.

மேற்கூறிய அதிகாரப் பொருண்மையில் சிலம்பும் கண்ணகியின் அதிகாரமும் காப்பிய முழுமையிலும் மேலாண்மை கொள்வதாக இளங்கோ படைத்துக் காட்டுகிறார். சூழ்வினைச் சிலம்பு காரணமாகச் சிலப்பதிகாரம் படைக்கப்பட்டதாகக் காப்பியத்தின் பாயிரம் உணர்த்துகிறது. இங்ஙனம் உணர்த்தியதால் சிலம்புக்கான முக்கால வினைமை (செயல்பாடு) உணரப்படும் நிலையில் உரைசால் பத்தினியாம் கண்ணகியின் வாழ்வும் ஒருசேர உணருமாறுள்ளதைக் கதைப் பாங்கால் உணரலாம். இதனால் சிலம்பு என்ற சொல்லுக்கான எதிரொலி என்ற பொருள் பொருத்தும் கண்ணகியின் அதிகாரத் திறனுக்கும் அமைவதை உணரலாம்.

எதிரொலி என்பது எதிர்ப்பான மாறுபட்ட ஒலி என்பதன்று; இணையான (சமமான) ஒலி என்பது கருத்து, ஒருவர் கூறும் ஒலியை

வாங்கி அப்படியே திருப்பி ஒலிப்பதால் எதிர்ஒலி எனப்பட்டது. இதில் ஒலி பிறக்கும் இடமும் அதன் எதிர் ஒலி பிறக்கும் இடமும் வேறு வேறாயினும் மாறாமல் கேட்கும் ஒலி ஒற்றுமையால் காப்பியத் தலைப்பான சிலம்பும் கதாநாயகியான கண்ணகியின் அதிகாரமும் காப்பியத்தை நடாத்திச் செல்லும் மேலாண்மையின் ஒற்றுமையால் பளிச்சிடுகிறது.

மகளிர் அணியும் அணி என்ற வகையில் சிலம்பு காப்பியத்தில் கண்ணகியின் சிலம்புகளோடு மதுரையின் பாண்டிமாதேவியின் சிலம்பையும் நினைப்பிக்கின்றது, சிலம்பைக் காலில் அணிந்து காட்சியளிக்காத கண்ணகியைப் போலவே பாண்டிமாதேவியும் சிலம்பணிந்து காட்டப்படவில்லை, இருவரது சிலம்புமே காப்பியத்தை நடத்தும் விறுவிறுப்பைத் தருகின்றன. இந்த வகையில் மதுரைச் சிலம்பு புகாரின் சிலம்பைக் காப்பியத்தை நடத்த துணைக்குக் கூவியழைப்பது போல இளங்கோவடிகள் காட்சிகளை எதிர் எதிராக அமைக்கின்றார், இந்த எதிர் எதிரான காட்சியையும் எதிரொலி எனலாம்.

மாதவியிடம் பிரிந்துசென்று விட்டதையறிந்த கண்ணகி முதன் முதலில் தன் காலில் அணிந்திருந்த சிலம்பைத்தான் கழற்றிப் பத்திரப்படுத்தினாள் என்கிறார் இளங்கோ. "அஞ்செஞ் சீறடி அணிச்சிலம்பு ஒழிய" என்பது அவர் வாக்கு. கதாபாத்திரமாம் கண்ணகியின் காலிலிருநது பிரித்தெடுக்கப்பட்ட சிலம்பு புகாரைவிட்டே பிரிந்து மதுரைக்குச் செல்கிறது. அங்கு இவளின் இருசிலம்புகளில் ஒன்று விற்பதற்காகப் பிரிக்கப்பட்டு மதுரையில் பொற்கொல்லனிடம் கைமாறி பாண்டியனது அரண்மனைக்குள் நுழைக்கப்படுகிறது.

இச்செயல்பாட்டை இலக்கண நிலையில் மெல்லினம் வல்லினமாக மாறிய உண்மையைப் பொருத்தி உணரலாம். தொல்காப்பியர்,

> அந்நாற் சொல்லும் தொடுக்கும் காலை
> வலிக்குவழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
> விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்குவழித் தொகுத்தலும்
> நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
> நாட்டல் வலிய என்மனார் புலவர் (எச்ச,7)

எனச் சொற்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறாக விகாரப்படுவதைக் கூறியுள்ளார். இதில் வலிக்கும் வழிவலித்தல் என்பதே கதைத் தொடர்பிற்குரிய இலக்கணம் ஆகும்.

ஈண்டுக்கூறிய சொல் விகாரம் பற்றிய நூற்பா செய்யுட்குரியதானாலும் ஏற்புழிக் கோடல் என்னும் இலக்கண உத்திப்படி உரைநடைப் பாங்கில் கரும்புச்சாறு கருப்பஞ்சாறு என்று கூறல் போல் சிலம்பு அதிகாரம் சிலப்பதிகாரம் என உரைநடைபாங்காயிற்று என்க!

இந்த மெல்லினம் வல்லினமாதல் என்பது மொழியை உச்சரிக்கும் பாங்கால் அமைவது, ஆனால் அதுவே காரணம் பற்றிய அளவில் வலிந்து பொருள் அமையும் என்பதையும் சிலப்பு – சிலப்பு என மாறியது கொண்டும் உணரலாம், இவ்வுண்மையைக் காப்பியக் கதைவழி உணர வேண்டும்.

கோவலன் பிரிந்ததும் கண்ணகியின் காலிலிருந்த சிலம்பும் பிரிகிறது. ஈண்டுப் பிரிகிறது என்பதைவிடப் பிரிக்கப்படுகிறது என்றே கூறலாம். கணவன் பிரிந்தான் என்ற வேதனையால் சிலம்பு பிரிக்கப்படுகிறது. இது காரணம் பற்றி வலிந்து செய்யப்பட்ட ஒன்றாகும், பழுதாகிவிட்ட நிலையில் காலிலிருந்து பிரித்தெடுக்கப்படுதற்கும் கணவன் பிரிவால் பிரித்தெடுக்கப்படுவதற்கும் வேற்றுமை உண்டு. பிரித்த சிலம்பு பழுதுபார்க்கப்பட்டு மீண்டும் அணியும் வாய்ப்புண்டு. ஆனால் கதையளவில் கணவன் பிரிந்து சேர்ந்தாலும் நெல்லின் மேலே மூடிய உமி பிரிந்து சேர அது (நெல்) முளையாக முளைக்க முடியாததைப் போலக் கண்ணகியை விட்டுக் கோவலன் பிரிய, அவன் பிரிவால் அவளும் பிரிந்து உயிர்விடுதலான அவலங்கள் எல்லாம் அடுத்தடுத்து நடக்கப் போவதென்பது இயல்பானதன்று, கோவலன் மாதவியிடம் பிரிந்து சென்ற வலிந்த செயலால் அதாவது வலிப்பால் நடக்கப்போவதன் முன்னறிவிப்பாகவே "அம்செஞ் சீறடி அணிச்சிலம்பு ஒழிய" எனக் கண்ணகியின் அழகிய சிறிய கால்களுக்குச் செய்யும் சிறப்பைச் சிலம்புகள் பெறாது நீங்கின என இலக்கியத் தரத்தோடு கூறப்பட்டது.

இங்ஙனம் கூறியதில் இருவேறு அவலங்கள் சுட்டப்படுகின்றதை உணரவேண்டும், கண்ணகி சிலம்பை அணிந்திருந்தால் அது அவளது அழகு மிகுதலோடு காலைச்சார்ந்த சிலம்பிற்கும் அழகு மிகும் என்ற கருத்து சிலம்பைப் பிரித்ததால் மாறிவிட்டன எனத் தெரிவதால் காலும் சிலம்பும் அழகிழந்து அவலப்பட்டனவாம் என்க!

இங்ஙனம் கூறிய இலக்கியத் தரத்தால் சிலம்பின் வேறோர்ஓசை தொனிப்பதையும் கேட்க முடிகிறது, அம்செஞ்சீறடி என்றதால் கண்ணகியின் கால்கள் இயற்கையழகுடையதென்பதும் அவற்றில் சிலம்பணிந்தால் அவை அழகு கூடியதென்பதும் தெரிவதைப்போல இயல்பாகவே பொன்னால் செய்யப்பட்ட சித்திரச்சிலம்பு கண்ணகியின் கால்களைச் சேர்ந்ததால் அழகு கூடினாலும் கோவலனின் பிரிவு சிலம்பின் சிலம்பின் பற்பல பிரிவுக்கும் காரணமான தொடர்ச்சியில் கதை அளவில் சிலம்பணிதற்குரிய கண்ணகி பாண்டிமாதேவி எனும் பெண் கதாபாத்திரங்களை உயிருடன் நிம்மதியாக வாழ வைக்காமல் பிரித்த காட்சிகளின் அரங்கேற்றத்தையும் சிலப்பதிகாரம் மாட்சியுடன் செய்து விட்டது எனலாம். இதுவும் ஒருவகையில் சிலம்பின் எதிரொலி ஆகும்.

கோவலனால் விற்க எடுத்துச் செல்லப்பட்ட ஒற்றைச் சிலம்பானது, பொற்கொல்லனால் கவரப்பட்ட அரண்மனையின் ஒற்றைச் சிலம்பை நினைப்பிக்கச் செய்கிறது.

அரண்மனையில் களவுபோன சிலம்பு காட்சிக்கு வரவில்லை. ஆனால், வழக்கின் பொருட்டுக் கண்ணகி ஏந்தி வந்த மற்றொரு சிலம்பு வழக்கின் தீர்ப்புக்காகக் கொண்டுவரப்பட்டாலும் தீர்ப்பை உறுதிப்படுத்த அது உதவவில்லை. ஆனாலும் பாண்டிமாதேவியின் அறியாமையை நினைப்பித்துத் தெளிவுபடுத்த உதவிய அளவில் கதையின்படிக் கண்ணகி இறப்பதற்கு முன்பே பாண்டிமா தேவியை மறைமுகமாக இறப்பிக்கச் செய்துவிட்டது எனலாம்.

ஏனெனில் கோவலனால் கொண்டுவரப்பட்ட சிலம்பு பொற்கொல்லனால் அரண்மனைக்குச் சேர்க்கப்பட்டதும் வழக்காட வந்த கண்ணகியின் முன்னர் அரசனது கட்டளையின்படி கொண்டு வந்து வைக்கப்பட்ட அச்சிலம்பை உடைத்துத் தான் உண்மையை உறுதிப்படுத்தியதால் பாண்டியன் இறந்த உடனே பாண்டிமாதேவியும் கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல் எனக்கூறி இறந்துபடக் கண்ணகி ஏந்திவந்த ஒற்றைச் சிலம்பின் காட்சி ஒரு மறைமுகக் காரணமாகும் எனலாம், அதனால் தான் பாண்டிமாதேவி இறந்தது தெரியாத நிலையிலேயே கண்ணகி ஆவேசப்பட்டு "செஞ்சிலம் பெறிந்து தேவியின் முன்னர் வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினியாக" அவையில் சாட்சியளிப்பதாக இளங்கோ கூறினார்.

இங்ஙனம் கூறியதில் ஓர் நுட்பம் உள்ளது, அதாவது களவுபோன சிலம்பு கிடைத்துவிட்ட நிலையில் தீர ஆய்வு செய்யாமல் பாண்டிமாதேவி தன் சிலம்பாகவே ஒப்புக்கொண்ட அவலத்தால்தான் கோவலன் கொலை செய்யப்பட்ட செயல் நடந்ததாகக் கண்ணகி யூகித்த அளவில் பாண்டிமாதேவியிடம் கூறாமல் கூறுபவளைப் போல, "பாண்டிமா தேவியே! என் கணவன் கொண்டுவந்த சிலம்பை உனது சிலம்பாகப் பிழைபட நினைத்துக் கொண்டதால் என்னால் அவையில் உடைபட்ட சிலம்புக்கு இணையான எனது மற்றொரு சிலம்பை ஒப்பிட்டுப் பார்ப்பாயாக" எனக் கண்ணகி பாண்டிமாதேவி முன்னர் சிலம்பை எறிந்தாளோ? என நினைக்கத் தோன்றுகிறது.

கோவலன் கொண்டு வந்த சிலம்பைப் பாண்டிமாதேவி பார்ப்பதற்கு முன்னமேயே அரசனது கட்டளையால் கோவலன் கொல்லப்பட்ட உண்மையைக் கண்ணகி அறியாள் என்பதால். பாண்டிமாதேவியின் ஒப்புதலும் கோவலன் இறப்புக்குக் காரணமாக இருந்திருக்கக்கூடும் எனக் கண்ணகி யூகித்திருப்பாள் எனக் கருதுவதில் ஐயமேதும் இருக்க முடியாது.

இந்நிலையில்தான் பாண்டிமாதேவியின் நெஞ்சமும் ஓரளவு களவுபோன சிலம்பும் கிடைத்துவிட்ட நிலையில் தானும் அதைச் சரிவரப் பார்க்காத அலட்சியமும் கோவலன் இறப்பதற்குக் காரணமாயிருக்கக்கூடும் எனச் சிநதித்ததன் காரணமாகவே கணவனை இழந்தோர்க்கு காட்டுவது இல் என்று கூறிக் கண்ணகியின் அவலத்திற்குத தன்னை மறைமுகமாகக் காரணமாக்கிக் கொண்டு இறந்துபட்டாள் போலும்!

பாண்டிமாதேவி கூறியதில்தான் சிலம்பு என்பதற்கான எதிரொலித்தல் என்ற பொருள் நுட்பம் பதிவாகியுள்ளது எனலாம். பாண்டிமாதேவி கூறியதிலிருந்து சில கருத்துக்கள் தெளிவாகின்றன. பாணடியனாகிய தன் கணவன் இறந்ததால் தானும் இறக்கவிழைந்த பாண்டிமாதேவியின் எண்ணமும் வெளிப்படுகிறது. அடுத்து, கணவனை இழந்தாள் கடையகத்தாளே என வாயிற் காவலன் அவையில் சொன்னபோதும் கண்ணகி, மன்னன் முன்பு வழக்காடியதுபோது நின்பால் கொலைக்களப்பட்ட கோவலன் மனைவி என்ற போதும் தன் கணவனின் அருகிருந்து அவற்றைக் கேட்ட பாண்டிமாதேவிக்கு வழக்காட வந்தவள் கணவனை இழந்தவள் என உணரத் தெரியாதிருந்த நிலையில் பின்னர்

உணரத் தெரிந்ததோடு அநியாயமாக அவள் கணவன் கொலை செய்யப்பட்ட அநீதிக்குத் தன் கணவனே காரணம் என்பதால்தான் "யானோ அரசன் யானே கள்வன். கெடுக என் ஆயுள்" எனக் கூறியிறந்தான் எனத் தீர்க்கமாக உணர்ந்த பாண்டிமாதேவியும் உலக நீதியாக ஒன்றை உரைத்து இறந்துபட்டாள்.

பாண்டிமாதேவியின் வாசகம் கண்ணகிக்கு ஆறுதல் தரக் கூறப்பட்டதன்று. அவளிடம் இவள் மன்னிப்பைக் கூறாமல் கூறிச் சரணடைந்த சரணாகதி வாசகம் என்றாலும் தகும். அதாவது கணவனை இழந்தவள் என்ன பாடுபடுவாள் என முன்னர் கண்ணகியைப் பார்த்த அளவில் உணராத பாண்டிமாதேவி தன் கணவன் பாண்டியன் இறந்ததும் தன்னைப் போலக் கண்ணகி என உணர்ந்தாள் எனத் தெரிகிறது. இங்ஙனம் உணர்ந்தாலும் இவ்வுணர்வு தனக்கும் கண்ணகிக்கும் மட்டுமின்றி உலகில் கணவனை இழந்த கண்ணகியின் அவலத்தை உணர்ந்து அவளிடம் கேளாமல் கேட்கும் மன்னிப்புச் சரணாகதி வாசகமாகவே கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல் என்பது எதிரொலித்தது எனலாம்.

பாண்டிமாதேவி கூறிய இத்தொடர் ஒருமை பன்மை மயக்கம்போல் உள்ளதாயினும தொல்காப்பிய இலக்கண வகையில் கதை தழுவிய உண்மையை உணரச் செய்கிறது எனலாம், கணவனை - ஒருமை. இழந்தோர்க்கு என்பது பன்மை. இத்தொடர் கண்ணகிக்கு மட்டும் கூறுவதாக இருந்தால் கணவனை இழந்தோளுக்கு எனப் பாண்டிமாதேவி கூறியிருக்கவேண்டும். அங்ஙனமின்றிப் பாண்டிமாதேவியும் தன் கணவனை இழந்துவிட்ட நிலையில் உள்ளதால் கணவனை இழந்த தனக்கும் எனக் கூறமுடியாத நிலையில் இந்த இழப்பென்பது கணவனை இழக்கும் எந்தப் பெண்ணுக்கும் பொதுமையானது என்பதால்தான் கண்ணகிக்கும் தனக்குமாக அல்லாமல் உலகப் பொதுமை நோக்கிக் கணவரை இழந்தோர்க்கு என்ற கருத்தில் கூறப்பட்டது என உணர்தல் வேண்டும்.

இதற்கான இலக்கணத்தைத் தொல்காப்பியர் சொல்லதிகார எச்சவியலின் 65-ஆம் நூற்பாவில் கீழ்க்கண்டவாறு அரண்செய்தார்.

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா ருண்டே

செய்யுளின் ஒரு தொடரில் ஒருமையும் பன்மையுமான சொற்கள் சேர்ந்து வரின் பொருள்நிலைக்கேற்ப ஒருமைச் சொல் பன்மையாக மாறும் என்கிறார் தொல்காப்பியர். இதற்கேற்ப இழந்தோர்க்கு என்ற பலர்பால் பன்மையால் கணவனை என்ற உயர்திணை ஆண்பால் ஒருமை கணவர்களை எனப்பலர் பாலாக மாறிப் பொருள் தரும் என்பது கருத்து, இப்பொதுமைக்குள்தான் கண்ணகியும் பாண்டிமாதேவியும் அமைகின்றனர். எனவே கணவனை இழந்தோர்க்கு என்ற சொற்கள் இலக்கணவகையில் ஒருமை பன்மைக்கான நிரவலைப் பெற்றாலும் காப்பியக் கதையளவில் சிலம்பு என்றால் எதிரொலி என்ற கருத்தாடலுக்கேற்பக் கணவனை இழந்த கண்ணகியின் அவலம் - பாண்டியனின் இறப்பால் பாண்டிமாதேவியின் அவலத்தையும் எதிரொலித்தது எனலாம்.

காப்பிய முழுமையிலும் சிலம்பின் அதிகாரமும் கண்ணகியின் அதிகாரமும் இருந்த இடத்தில் இருந்தும் அடுத்து இடம்விட்டுப் பெயர்ந்தும் செயல்பட்டன என்பதைக் கதையோடே பொருந்த உணரலாம்.

கண்ணகி காலில் கிடந்த சிலம்பு கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து கண்ணகியை மீண்டும் நாடிவந்தபோது கண்ணகி சிலம்புள கொண்ம் என்று கூறக்கேட்டவன் சிலம்பைக் கொண்டு வாழலாம் எனக் கூறியபோது சிலம்பின அதிகாரம் புகார்க் காண்டத்து அளவில் இருந்தது. அவ்வாறே கண்ணகியும் கோவலனால் உலவாக் கட்டுரையால் பாராட்டப்பெறும் நிலையிலும் பின்னர் மாதவிபால் கணவன் பிரிந்ததும் மாறா உள்ள வாழக்கையை நடத்தியதோடு கணவன் தன்னை வந்து சேர, சூரியகுண்டம் போன்றவற்றில் மூழ்காதவளாய் பூமியினும் பொறுமையான அதிகாரமுடையவளாகப் புகாரில் இருந்தாள்.

அடுத்து புகாரை விட்டுப் பிரிந்த சிலம்பும், கண்ணகியும் தத்தம் அளவில் செய்து காட்டிய அதிகாரச் செயல்பாடுகள் மதுரையையே கலங்க வைத்ததால் கண்ணகியின் சிலம்பு பாண்டி நாட்டின் அரண்மனைச் சிலம்பை ஆட்டிப்படைத்தது போலக் கண்ணகியோ பர்ண்டிய மன்னனையும் ஆட்சியையும் பாண்டிமாதேவியையும் நடுநடுங்க வைத்தாளென்பது சென்று பரவும் அரச அதிகாரத்தின் நிலையை உணர்த்திற்று எனலாம். எனவே எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்ற நூற்பாவுக்கேற்பச் சிலப்பதிகாரம் என்ற சொல்லும் சொற்பிரிப்பிலான பொருளும் கதை தழுவிய பாங்கில் இலக்கணச் செறிவை உணர்த்தின எனலாம்!

— —

# குன்றக்குடி
# அருள்தரு சண்முகநாதப் பெருமான் கந்தர்சஷ்டித் திருவிழா



குன்றக்குடியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அருள்தரு சண்முகநாதப்பெருமான் திருக்கோயில் கந்தர்சஷ்டித் திருவிழா 28.10.2019 முதல் 3.11.2019 வரை மிகச் சிறப்பாக நடைபெற்றது.

28.10.2019 முதல் 1.11.2019 வரை ஒவ்வொரு திருநாளிலும் அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருவீதியில் எழுந்தருளிவந்து பக்தர்களுக்கு காட்சி தந்து அருளினார். 2.11.2019 ஆறாம் திருநாளன்று மாலை 4.00 மணி அளவில் அருள்தரு சண்முகநாதப்பெருமான் அம்மையிடம் சக்திவாங்குதல் நிகழ்வும் மாலை 4.30 மணியளவில் வெள்ளிரதத்தில் திருவீதியில் எழுந்தருளிவந்து சூரனைத் தடிதலும் ஆட்கொள்ளுதலுமான விழா நிகழ்ந்தது. இந்த நிகழ்ச்சியை ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு திருவருள்பெற்று மகிழ்ந்தனர்.

3.11.2019 ஞாயிறு 7ஆம் திருநாள் பகல் 11 மணியளவில் அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு மகாபிஷேகம் நடைபெற்றது. மாலை மணி 6.30 மணியளவில் தெய்வானை திருமணம் நிறைவெய்தி இரவு 8.00 மணியளவில் அருள்தரு சண்முகநாதப்பெருமான் தங்கரதத்தில் திருவீதி எழுந்தருளி அன்பர்களுக்கு திருக்காட்சியருள விழா இனிதே நிறைவெய்தியது.

28.10.2019 முதல் 1.11.2019 வரை 5 நாள்கள் காலையிலும் மாலையிலும் 2.11.2019 காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரையிலும் நூறாயிரம் போற்றி (இலட்சார்ச்சனை) நடைபெற்றது. குறிப்பிடத்தக்கது.

# அனிச்சம் உதிர்ந்தது

(தமிழாகரர். தெ. முருகசாமி)

- காரைக் குடிகழனி வாசலில் பூத்தேதான்
பேரைப் பழநியெனப் பெற்றிட்டார்! - ஊரை
அனிச்ச மலர்குழைய மோந்தே உதிர்ந்தார்!
அனிச்சமாய் இல்லத்தில் இன்று!

- அநந்நாளில் ஆன்ற முடியரசர் முத்துசம்
பந்தருடன் பள்ளிப் பணியாற்ற - பைந்தமிழ்
மூன்றென் பதைப்போல் முடிவேந்தர் என்பதற்கும்
சான்றாம் பழநியார் கூட்டு!

- முடியரசர் ஆ.பழநி என்பாரைக் காரைக்
குடிதான் இரட்டையராய்க் கூறும் - படியால்
தமிழண்ணல் தான்சேரத் தண்ணார்நட் பிற்கே
அமிழ்தானார் அம்மூவர் தான்.

- அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கென்ற
இன்பக் குறட்கே இருப்பான - பொன்னுரை
ஆகும் படிஉடலை ஆமாம் மருத்துவ
ஆய்வுக் களித்தார் அவர்!

- குன்றக் குடியினது சிந்தனை நந்தவன
மன்றத்தார் போற்ற மனதார - அன்றடிகள்
போலவே இன்றடிகள் பொன்னம் பலர்போற்ற
சாலவும் பெற்றார் புகழ்!

- பழகும்நல் பாங்கியலில் பண்பார் பழநி
பழகுதமிழ் அன்னார் படிப்பால் - அழகு
கொழிக்கும் பலநூல்கள் தாரணிக்குத் தந்தோர்
விழிக்கு மணிபோல் விழைந்து!

- கழனி விளைச்சலால் காசினி வாழும்!
பழநி விதைத்தமிழ் ஆய்வு - துழனியிலாத்
தூய்வாய்த் துலங்கத் தமிழ்நூல் வயற்கேதான்
தூவுவிதை ஆனார் தொடர்ந்து!

(துழனியிலா - குறை குற்றமிலா)

- சிலப்பதி காரத்தைச் சீர்சீராய் ஆய்ந்தே
பலப்பல நூல்நெய்த போது - கலப்பட
நூலிழை ஒன்று நுழைந்த நெருடலைப்
பாலினிப்பாய்ச் செய்தார் பரிந்து!

- சாலிமைந்தன் நூலைப் பகுத்தறி வாம்பயிர்க்கு
வேலியாய்த் தான்படைத்தார் வீறுடன் - கூலிக்குப்
பாட்டெழுதா தாரையே போற்றும் முடியரசர்
பாட்டுக்காம் சான்றுபழ நி!
- பாவேந்தர் பாரதிக்குத் தான்தாசன் என்றநூல்
நாவேந்திப் பாராட்டா தாருண்டோ? - பூவேந்தும்
மாத்தமிழ் மாமணமாய் ஆக்கப் பழநியார்
மாப்புகழ் பெற்றார் மதித்து!
- கானல் வரியான கன்னித் தமிழ்நூல்தான்
கானல்நீர் போன்றதல்லாப் பொற்பாலே - கான்மணம்
வீசும் வியன்நூலின் வித்தகத்தைத் தானுமே
பேச விழையும் பொழுது!
- அண்ணா பெரியார் கலைஞரை மூன்றான
கண்ணாகக் கொண்ட பழநியார் - மண்ணில்
சுயமரி யாதைச் சிவனாய் விளங்கி
நயந்தார் மனிதநேயத் தால்!
- காமம்தான் செப்பாமல் கண்டதைச் சாற்றென்ற
ஏமத் தமிழறத்தை எந்நாளும் - தாமாகப்
பற்றிவாழ்ந் திட்ட பழநியார் நற்பண்பை
உற்றா ருடனறியும் ஊர்!
- "செத்துப் பிழைத்தவன்டா" என்ற சினி மாப்பாட்டை
ஒத்தபடி மூன்றுமுறை செத்தெழுந்தார்! - சித்தர்போல்
தான்தனியே வாழ்ந்தாலும் தண்ணார் தமிழ்ச்சுற்றம்
வான்பெரிதாம் நம்பழ நிக்கு!
- ஆற்றாமை ஆற்றுவது ஒன்றையே பற்றுமெனப்
போற்றும் புகழுரைக்குப் பொற்பாக - ஊற்றெனக்
கம்பர் மறுபக்கம் காட்டிய நம்பழநி
இம்பரில் வாழ்வார் இனிது!
- என்றெனது அஞ்சலியை ராமசாமி பேர்வளர்
வென்றதமிழ்க் கல்லூரி வேட்கையுடன் - நின்றபுகழ்
செந்தமிழ்ச் செல்வர் பெரிய கருப்பரின்
சிந்தையொடு தந்தேன் தனித்து!

.....

# உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் சார்பில் பட்டிமன்றம்

உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் சார்பில் திருக்குறள் பெரிதும் வலியுறுத்துவது அறமே, பொருளே, இன்பமே எனும் தலைப்பில் பட்டிமன்றம் சி.எம். மேனிலைப்பள்ளி திருவள்ளுவர் அரங்கில் பணிநிறைவு பெற்ற கருவூலத்துறை அரசு அலுவலர் செய்யது முகம்மது செரீப் தலைமையில் மாநில வங்கி முன்னாள் மேலாளர் தனராசு, துறைமுகம் முருகேசன் முன்னிலையில் நடைபெற்றது.

உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் செயலாளர் மோ. அன்பழகன் வரவேற்றுப் பேசினார்.

கவிஞர் செல்வராமன், பரமன்குறிச்சி அபர்னா மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி மாணவி சென்டிரிலா அறமே எனும் தலைப்பிலும், ஞா.தபராசு, தூய மாற்கு மேனிலைப்பள்ளி மாணவி நேசிகா பொருளே எனும் தலைப்பில் கவிஞர்இளமுருகுவும் பேசினார்கள்.

பட்டிமன்றத்திற்கு தமிழ் அறம் இலக்கிய இதழில் ஆசிரியர், மருத்துவர் த. இராசலிங்கம் நடுவராக இருந்து திருக்குறள பெரிதும் வலியுறுத்துவது அறமே என்று தீர்ப்பளித்தார்.

கூட்டத்தில் தனபாலன் ஆசிரியர்கள் முத்துசுந்தரம், சுந்தரி, சுமதி பேரவை உறுப்பினர்கள் தனபால், முருகையா, தாழை மணி, சாந்தி, அன்பு, கணேசன், லதா, அல்போன்சா, சரவணப்பெருமாள் ஆகியோர் கலந்து கொண்டனர்.

ஆசிரியர் தேவிகா நன்றி கூறினார்.



*மக்கள் சிந்தனை வாசகர்களுக்கு*

*இனிய பொங்கல்*

*நல்வாழ்த்துக்கள்!*



## குன்றக்குடி
## அருள்தரு சண்முகநாதப்பெருமான் திருக்கோயில்
## திருக்கார்த்திகைத் திருவிழா

குன்றக்குடியில் எழுந்தருளி அருள்பாலித்து வரும் அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் திருக்கார்த்திகைத் திருவிழா 10.12.2019 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. 10.12.2019 காலை 11 மணியளவில் அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்குச் சந்தனத் திருமுழுக்காட்டு மிகச்சிறப்பாக நடைபெற்றது.

மாலை 6.10 மணியளவில் மலைமேல் அண்ணாமலை தீபம் ஏற்றப்பெற்றது. ஆயிரக்கணக்கான மக்கள் தரிசித்து திருவருள் பெற்றனர். அன்று அதிகாலை முதல் முன்னிரவு வரை பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் சாரி சாரியாக வந்து அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு அருச்சனை வழிபாடு செய்து தரிசனம் செய்து திருவருள் பெற்றுச் சென்றது கண்கொள்ளாக் காட்சியாக அமைந்தது.

---

## படைப்பின் பாரபட்சம்!

கவிவேந்தர் கா. வேழவேந்தன்

*விடிந்தது காலை; வீதியைப் பார்த்தேன்!*
*கடிகா ரத்தின் நொடிமுள் போலே*
*படபடப் போடு நடந்தார் சிலரும்!*
*உப்பிய தொப்பையை எப்படி யேனும்*
*குறைத்திட வேண்டி விறைப்புடன் ஓடிய*
*குண்டு மனிதரும் கண்டேன்! ஆங்கே*
*ஒட்டிய வயிற்றின் பட்டினி ஓட்டிட*
*ஓட்டமும் நடையுமாய் உழைப்பா ளர்சிலர்*
*செல்வதும் கண்டேன்! செல்வர், ஏழை*
*இருவர் கவலையும் இருக்கும் "வயி"றா?*
*குறைப்பதற் கொருவன், நிறைப்பதற் கொருவன்*
*ஓடும் கொடுமையின் வேடிக்கை எண்ணினேன்!*
*படைப்பு நிகழ்த்திய பாரபட் சத்தால்*
*உடைந்தது நெஞ்சம்; "விடிய"லும் என்றோ?*

# "அனிச்ச அடி" புலவர் ஆ. பழநி காலமானார்



காரைக்குடி புலவர் ஆ.பழநி அவர்கள் காரைக்குடியில் அவர்தம் இல்லத்தில் காலமானார். இவர் பெரும்புலவர் மட்டுமன்றி மிகச்சிறந்த கவிஞர் என்பது தமிழுலகம் நன்கு அறிந்ததே. காரைக்குடி மீ.சு.மேனிலைப்பள்ளியில் தமிழாசிரியராக பணியாற்றிய சிறப்பினர். மிகச்சிறந்த புலவர்; கவிஞர். இவரது கவிநலத்தைப் பாராட்டி 45-ஆவது குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் 1980ஆம் ஆண்டு பறம்புமலை வள்ளல் பாரி விழாவில் "கவிஞர்கோ" விருது வழங்கிப் பாராட்டப்பெற்றார். தமிழ்நாடு அரசின் பாரதிதாசன் விருதும் மேலும் பல விருதுகளும் பெற்ற பெருங்கவிஞர். இவர் பாடிய "அனிச்சஅடிக்காப்பியம்" மனோன்மணியம் சுந்தரனார் பாடிய மனோன்மணியம் போன்ற நாடகக் காப்பியமாகும். கல்லூரிகளில், பல்கலைக் கழகங்களில் இக்காப்பியம் பாடநூலாக அமைந்த சிறப்புக்குரியது. இத்தகைய பெரும்புலவர் கவிஞர்கோ ஆ.பழனி அவர்களின் மறைவு தமிழுலகிற்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். இவர்தம் மறைவு குறித்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது; இவரை இழந்து துயருறும் இவர்தம் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்கிறது. இவர்தம் இன்னுயிர் அமைதி பெற இறைஞ்சுகிறது.

– ஆசிரியர்

# காப்பியக் கவிஞர் நா. மீனவன் காலமானார்



தமிழகத்தில் விரல்விட்டு எண்ணக்கூடிய கவிஞர்களில் ஒருவரான காப்பியக் கவிஞர் நா. மீனவன் காலமானார். இவர் மிகச்சிறந்த மரபுக் கவிஞர், விரைந்து கவிபுனையும் ஆற்றலுடையவர் ஏறத்தாழ 2000 கவியரங்குகளில் அற்புதமாகப் பாடிப் புகழ்பெற்ற பெருங்கவிஞர். இவர் பாடிப் பரிசுபெற்ற மாதவ மேகலைக் காப்பியம் "தமிழ்ச்சுரங்கம்" அமைப்பின் பரிசு பெற்றதாகும். இக்காப்பியம் மணிமேகலைக் காப்பியத்துக்கு ஒப்பானது என்பர். ஆழ்ந்த புலமையும் விரைந்து கவிபாடும் திறமும் இவருக்கு இறைவனளித்த கொடை எனலாம். அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களைத் தலைவராகக் கொண்டு இயங்கிய திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கத்தில் நிகழ்ந்த கவிதைப் போட்டியில் பங்குபெற்றுப் பாடி "பொற்கிழிக்கவிஞர்" எனும் பட்டமும் ரூ. 1000/- ரொக்கப் பரிசும் பெற்றவர். மேலும் திருப்புத்தூரில் நடைபெற்ற திருமுறை விழாவில் அருள்நெறித் தந்தை அவர்களால் "கவிஞர்கோ" விருதும் பெற்றவர்.

இவர் மறைவால் துயரும் இவர்தம் குடும்பத்தினருக்கு ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்வதோடு இத்தகு பெருங்கவிஞர் நா. மீனவன் அவர்களின் மறைவு குறித்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது. இவர்தம் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெற இறைஞ்சுகிறது.

– ஆசிரியர்

*சிறப்பாசிரியருக்கு வந்த கடிதங்கள்.......*

"மக்கள் சிந்தனை" ஆனி - ஐப்பசி இதழில் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களின் அமெரிக்கப் பயணச் சிறப்புக்கட்டுரை மிக அருமை! அணை இல்லாக் காவிரிபோல் இணையில்லா ஓட்டம்! அட்லாண்டிக் கடல் போல மட்டில்லா ஆழம்!! லிங்கன் முதல் லூதர்கிங் வரை ஒப்பற்ற தலைவர்கள் கொட்டிய பொன்மொழிகள்! கட்டுரை மேலும் தொடரட்டும்! கனிகள் பழுத்துக் குலுங்கட்டும்.

– பொற்கிழிக்கவிஞர்.அரு. **சோமசுந்தரன்**

மக்கள்சிந்தனையில் அப்பாலும் அடிச்சேர்ந்த அமெரிக்கத் தமிழரின் போற்றுதற்குரிய மாட்சிமை விருது பெற்ற மக்களின் முனிவர் அருளிய அமெரிக்கப் பயணக் கட்டுரையில், ஆப்ரகாம் லிங்கன், பன்றிக்குதவிய செயலைப் பலரும் பாராட்டியபோது "யாரும் என்னைப் புகழாதீர்கள் என் இதயத்திற்குத்தான் நன்மை செய்து கொண்டேன்" என்று கூறியதைப் பதிவு செய்திருப்பது புகழ்ச்சியைக் கடந்த யோகமே. யோக்திற்பொலிவே என்ற வாதவூரா் வாக்கை நினைவூட்டிய மெய்யத்தவத்தை ஒப்பிட்டு மகிழ்ந்தேன். "எழுத்துவலை வேட்டுவர்" என்பதை அக்கட்டுரை வியக்க வைத்தது.

தமிழாகரரின் தொல்காப்பியப் பதிவுக் கட்டுரையில், சிலப்பதிகாரம் "உரையொடு புணர்ந்த பழமை மேற்று" என்ற நூற்பாவை நுண்ணிதின் உணர்ந்து பழமையான பாரதம் முதலியன தொன்மையானாலும், சிலம்பு தொன்மை எனக் கூறப்படாமல் அக்கூறடங்கிய நாடகத்தின் இலக்கிய கூறடங்கிய சிலம்பை அவற்றோடு கூறாமல், சிலம்பும் அதன்பாற்படும் என்று நச்சர் கூறியதை வியந்து கண்டு விளக்கிய சம்பவங்கள் அருமை! அவரே செம்மொழிச்செல்வர்!

– தருமையாதினப்புலவர்.த. **குருசாமிதேசிகர்**

மக்கள் சிந்தனை ஆனி – ஐப்பசி இதழ். மேற்படி இதழை சமீபத்தில் குருமகாசந்நிதானம் அவர்களை, மதுரை காமராசர் பல்கலைக்கழக மேனாள் பேராசிரியர் திரு. ஆண்டியப்பன அவர்களுடன் சேர்ந்து சந்திக்கும்பேறு பெற்றேன்.

அவ்விதழில் குருமகாசந்நிதானம் அவர்களின் "அமெரிக்கப் பயணச் சிறப்புக் கட்டுரை" மிகச்சிறப்பாக இருந்தது. குறிப்பாக கருப்பு இன மக்களின் துயர்கள் எவ்வாறெல்லாம் இருந்தன. அவற்றைக் களைய அத்தேசத்தின் தலைவர்கள் மேற்கொண்ட பணிகள் முதலியவற்றைத் தெள்ளத் தெளிவாக விளக்கியிருந்தது போற்றுதற்குரியது.

தேச நலனிலும் மக்கள் நலனிலும் தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் அடிச்சுவட்டில் பீடுநடைபோடும் குன்றக்குடி ஆதீனத்திற்கு மனமுவந்த பாராட்டுக்கள்.

– Ln.S.[illegible], மதுரை

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : **தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின்அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | ½ பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

**சந்தா விவரம்**

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

**சந்தா – விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :**

நிர்வாகி
மக்கள் சிந்தனை
குன்றக்குடி – 630 206
சிவகங்கை மாவட்டம்

இந்தியன் வங்கி, பிள்ளையார்பட்டி கணக்கு எண் : 554267544 மூலமும்
மணியார்டர், வங்கி வரைவோலை / காசோலை மூலமும்
அனுப்பலாம்.

ஆதீன இணையதள முகவரி : website : www.kkmutt.org

ஆசிரியர் : **மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி



தருமபுரம் ஆதீனம் 27ஆம் திருவருள்திரு குருமகாசந்நிதானம்
ஞானபீடம் எழுந்தருளிய நாளன்று

**BOOK POST**
**Book pocket containing printed matter**
**MAKKAL CHINTHANAI-Nov 2019-Feb 2020**

**Price Rs. 8-00**
Date of Publication 25-02-2020




21-1-2020 அன்று இரத்தினகிரியில் நடைபெற்ற வேலூர் மாவட்ட
திருக்குறள் பேரவை ஆண்டுவிழா – பரிசளிப்பு விழா



26-1-2020 கு

C129
திருவருள் திரு சுவாமிகள் அடிகள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
மானகிரி அஞ்சல்
காரைக்குடி வழி

4.00 भारत INDIA
SRINIVASA RAMANUJAN

பெறுநர்

திரு

அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166